28

# மூவர் தமிழ் வாசகம்





இரண்டாம் படிவம்

சிறப்புப் பகுதி

# மூவர் தமிழ் வாசகம்

## இரண்டாம் படிவம்—இரண்டாம் பிரிவு

[சிறப்புப் பகுதி]





ஆசிரியர்கள் :

வித்துவான் கோ. வில்வபதி

வித்துவான் எம். எஸ். வேங்கடாச்சாரி

டி. ஆர். ஸ்ரீநிவாசன், பி. எ., பி. டி. (தமிழ்)

இந்து தியலாஜிகல் உயர்நிலைப்பள்ளி, சென்னை.





வர்தா பதிப்புக் கழகம்

திருவல்லிக்கேணி : : சென்னை

[விலை அணா 12

# முகவுரை

'மூவர் தமிழ் வாசகம்' என்ற இந்நூல் வரிசை அரசியலார் அண்மையில் (26-6-51-இல்) வெளியிட்ட பாடத் திட்ட முறைக்கு ஏற்ப எழுதப் பெற்றதாகும்.

பாடத்திட்டப்படி முதல் மூன்று படிவங்களுக்குத் தாய் மொழிக் கல்வி முறை, பொதுப் பகுதி என்றும் சிறப்புப் பகுதி என்றும் இரண்டு பிரிவுகளாக அமைக்கப்பட்டுள்ளது. இரண்டு பகுதிகளிலும் அமையவேண்டிய பாடங்களின் இயல்புகளும், செய்யுட்களின் வகைகளும் தரப்பட்டுள்ளன. இரண்டாம் பகுதி முதற் பகுதியைவிடச் சிறிது உயர்ந்த நடையுடையதாய் மாணவர்க்குத் தமிழ்ச் சுவை ஊட்டக்கூடியதாய் இருத்தல் வேண்டும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. அம்முறையை நன்கு உளங்கொண்டு இவ்வாசக வரிசை எழுதப் பெற்றுள்ளது.

இந்நூல் இரண்டாம் படிவ மாணவர்க்குரிய சிறப்புப் பகுதி நூலாகும். இதில் உரைநடையும் செய்யுளும் மாணவர் விரும்பிக் கற்குமாறு அமைக்கப்பட்டுள்ளன. பாடத் திட்டத்தில் கூறியவாறு இனிய தமிழ் நடையில் உரை நடைப் பாடங்கள் எழுதப்பட்டுள்ளன. இதனால் மாணவர்கட்கு அழகிய தமிழ் நடையில் எழுதும் பழக்கம் உண்டாகும் என்று நம்புகின்றோம். செய்யுட் பகுதியில் ஆசிரியர் தம் விருப்பத்திற்கேற்றவாறு பாடல்களைத் தேர்ந்தெடுத்துக் கற்பிப்பதற்கு ஏற்ற முறையில் சில வரிகள் அதிகமாகத் தரப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் குறிப்புக்கள், பயிற்சி வினாக்கள் முதலியன தரப்பட்டுள்ளன. ஆங்கில முறையை யொட்டிச் சிறந்த மொழிப் பயிற்சிகளும் கட்டுரைப் பயிற்சிகளும் அமைக்கப்பட்டுள்ளன. மாணவர் அகராதியைப் பயன்படுத்துவதின் இன்றியமையாமையும் இப்பகுதியில் வற்புறுத்தப்பட்டுள்ளது. அரசாங்கத்தாரின் பாடத் திட்ட முறைக்கு ஏற்ப ஒவ்வொரு பாடத்திலும் சிறந்த இலக்கணப் பயிற்சிகள் தரப்பட்டுள்ளன.

உரைநடைப் பாடத்தைக் கற்பிக்கும்போதே இலக்கணப் பகுதியையும் தொடர்பு படுத்திக் கற்பிப்பது சிறந்த நன்மையளிக்கும். மாணவர்கள் இப்பயிற்சிகளைச் செய்து பழகுவதால் அவர்களுடைய தமிழறிவு வளர்ச்சி பெறும்.

செய்யுட் பகுதியிலும் ஆசிரியர் குறிப்பு, அருஞ்சொல் விளக்கம், விஞக்கள், பலவிதமான மொழிப் பயிற்சிகள் ஆகியன அளிக்கப்பட்டுள்ளன. இவை தமிழ்ச் செய்யுள்களைக் கற்பதில் மாணவர்க்கு ஆர்வம் ஊட்டும் என்பது எம் எண்ணம்.

அறிஞர்கள் இந்நூல் வரிசையை ஆதரித்து மேலும் எங்கட்கு இத்துறையில் ஊக்கமளிக்குமாறு வேண்டுகிறோம். இந்நூல் வரிசை மாணவர்க்குப் பெரும் பயன் விளைக்க அருள் புரியுமாறு வேண்டித் தமிழன்னையின் அடியிணைகட்கு இதனை அன்புக் கையுறையாக அளிக்கிறோம்.

ஆசிரியர்கள்

## எங்கள் நன்றி

கீழே தரப்பட்டுள்ள பாடல்களையும் படங்களையும் இந்நூலில் வெளியிட அருள் கூர்ந்து இசைவு தந்த அறிஞர்கள் அனைவர்க்கும் எம் வணக்கமும் நன்றியும் உரியன.

1. இயற்கை இன்பம்—(12 வரிகள்) கவிஞர் வாணிதாசனுர், கல்வே கல்லூரி, புதுவை.
2. மலையும் அணிலும்—(31 வரிகள்) கவிமணி. தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள், உரிமை: திரு. குமாரசாமிப் பிள்ளை, புத்தேரி.
3. பாரதியார் பாடல்—சென்னை அரசாங்கக் கல்வி இலாகா.
4. தமிழ்ப் பெரியார் திரு. வி. க. படம்—சென்னை மாணவர் மன்றத்தினர்.

வர்தா பதிப்புக் கழகம்

# பொருளடக்கம்

## உரைநடைப் பகுதி



## செய்யுட் பகுதி



தமிழ்ப் பெரியார் திரு. வி. க.

# மூவர் தமிழ் வாசகம்

## இரண்டாம் படிவம்—சிறப்பு



## உரைநடைப் பகுதி

### 1. தமிழ்ப் பெரியார் திரு. வி. க.

தமிழ் இனிமையான மொழி. தமிழ் என்ற சொல்லுக்கே இனிமை என்பது பொருள். உலகில் வழங்கும் சிறந்த மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்ருகும். மிகப் பழங்காலம் முதல் தமிழ்ப் புலவர் பலர் வழி வழியாகத் தமிழ் மொழியை வளர்த்து வந்தனர். தொல்காப்பியர், திருவள்ளுவர், இளங்கோ வடிகள், கம்பர் போன்ற புலவர்கள் அவர்களில் சிறந்தவர்கள். இந்த இருபதாம் நூற்ருண்டில் தமிழ் மொழிக்குத் தொண்டு செய்த பெரியார்களில் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. சிறப்பாகக் குறிக்கத்தக்கவ ராவர். அண்மையில் மறைந்த அவருடைய வாழ்க்கை வரலாறு இளைஞர்கட்குத் தக்க எடுத்துக்காட்டாகும்.

திரு. வி. க. என்பது திருவாரூர் வி. கலியாண சுந்தர முதலியார் என்ற பெயரின் சுருக்கமாகும். கலியாணசுந்தரனரின் முன்னேர் திருவாரூரில் வாழ்ந்தமையால் திரு என்ற அழகிய சொல் அவ ருடைய பெயருக்கு முன் அமைந்து விளங்குகின்றது.

திரு. வி. க. அவர்களின் தந்தையார் **விருத்தாசல முதலியார்**; தாயார் **சின்னம்மையார்**. திரு. வி. க. அவர்கள் பிறக்கும்போது விருத்தாசல முதலியார் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ' துள்ளம் ' என்ற சிற்றூரில் வாழ்ந்துவந்தார். அவருடைய குடும்பம் மிக்க ஏழ்மை நிலையில் இருந்தது. சிறிய மளிகைக் கடையின் மூலம் அவர் பெற்ற வருவாயைக் கொண்டு குடும்பத்தைக் காத்து வந்தார்.

அத்தகைய குடும்பத்தில் அருமையான குணங்களையுடைய பெற்றோர்க்கு ஆறுவது குழந்தையாக, சுபானு ஆண்டு ஆவணித் திங்கள் பதினோராம் நாள் (26-8-1883) ஞாயிற்றுக் கிழமையன்று திரு. வி. க. அவர்கள் பிறந்தார்கள். இவர் தமையனார் **திரு. வி. உலகநாத முதலியார்** என்பவராவர். கலியாண சுந்தரம் என்ற அழகிய பெயர் வாய்க்கப்பெற்ற நம் பெரியார் இளமையில் பெய்ருக்கேற்பத் திண்மையான உடலும் அழகும் உடையவராக விளங்கினார். சுறு சுறுப்பு, எதைப் பார்த்தாலும் ஆராயும் குணம், அஞ்சாமை, மன உறுதி முதலியன அவருடைய குழந்தைப் பருவக் குணங்களாக விளங்கின. ' ஆறுவது ஆண் குழந்தை ஆனை கட்டி வாழ்வான் ' என்பது நம் நாட்டில் வழங்கும் மொழியாகும். ஆகையால் திரு. வி. க. அவர்கள் பிற்காலத்தில் பேரும் புகழும் பெற்றுச் சிறப்பாக வாழ்வர் என்று அனைவரும் கூறிவந்தனர். அதுகேட்டு அவருடைய பெற்றோர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கோர் அளவேயில்லை. அவர்கள் திரு. வி. க. அவர்களைக் கண்ணும் கருத்துமாகப் போற்றி வளர்த்துவந்தனர்.

இங்ஙனம் கண்டவர் அனைவராலும் பெரிதும் திரு. வி. க. அவர்கள் பாராட்டப் பெற்றமையால்

விருத்தாசல முதலியார் அவருக்குச் சிறந்த கல்வி கற்பிக்க எண்ணினர். அதனல் அவர் துள்ளத்தை விட்டுச் சென்னை இராயப்பேட்டையில் குடியேறினர். அவருடைய உறவினர் பலரும் அங்கே வாழ்ந்து வந்தனர். திரு. வி. க. அவர்களும் அவர் தமைய ஞரும் ஓர் ஆரம்பப் பள்ளியில் கல்வி பயிலத் தொடங் கினர். பின்னர் அவர் வெஸ்லி கல்லூரியில் நான்காம் வகுப்பில் சேர்ந்து கல்வி பயின்ருர். இயற்கையி லேயே நுண்ணறிவும் ஊக்கமும் உடைய திரு. வி. க. அவர்கள் வகுப்பில் முதல் மாணவராகவே விளங்கி வந்தனர். படிப்பிலே மட்டுமன்றி விளையாட்டிலும் அவர் வல்லவராக விளங்கினர். சடுகுடு விளையாடு வதில் அக்காலத்தில் அவர் மிகச் சிறந்து விளங்கினர். அவரைத் தலைவராகக் கொண்ட மாணவர் விளையாட் டுக்குழு அப்போது சென்னையில் புகழ்பெற்று விளங் கிய எத்தனையோ பெரிய விளையாட்டுக் குழுக்களைச் சடுகுடு பந்தயத்தில் வென்றுள்ளது. இங்ஙனம் எல்லா வகையிலும் சிறந்து விளங்கிய கலியாண சுந்தரனர் திடீரென்று உண்டாகிய முடக்குவாத நோயினல் பீடிக்கப்பட்டு மிக வருந்தினர். அதனல் இரண்டாண்டுகள் அவருடைய கல்வி தடைப்பட்டது.

மறுபடியும் கலியாணசுந்தரனர் வெஸ்லி கல் லூரியில் சேர்ந்து கல்வி பயிலத் தொடங்கினர். அப் போது பெரும் புலவராக விளங்கிய யாழ்ப்பாணம் கதிரைவேற்பிள்ளை என்பவர் அப்பள்ளியில் தமி ழாசிரியராக இருந்தார். அவரிடம் கலியாணசுந்தர னர்க்கு மிக்க மதிப்பு இருந்தது. அவருடைய போத னையும் அன்பும் திரு. வி. க. அவர்களைக் கவர்ந்தன. அதனல் அவர் அவரிடம் மிக நெருங்கிப் பழகிவந்தார்; அவரிடம் பல தமிழ் நூல்களையும் பயின்ருர். அக்

காலத்தில் சிறந்து விளங்கிய மற்றும் பல தமிழறிஞர் களிடமும் திரு. வி. க. அவர்கள் தமிழ் கற்ருர் என்ரு லும், இறுதிவரை கதிரைவேற்பிள்ளை அவர்களையே தம் தமிழாசிரியராகக் கருதிப் போற்றிவந்தார். கலியாணசுந்தரனுர் மெட்ரிகுலேஷன் வகுப்பில் படிக் கும்போது தமிழாசிரியர் கதிரைவேற்பிள்ளை அவர் கட்காக ஒரு வழக்கில் சாட்சி சொல்ல நேர்ந்தது. அதனுல் மெட்ரிகுலேஷன் தகுதித் தேர்வில் சரியாகக் கலந்துகொள்ள இயலாமல் போய்விட்டது. அதனேடு அவர் பள்ளிப் படிப்பு முடிவுற்றது. ஆசிரியர்க்காகத் தம் அருமையான எதிர்கால வாழ்வையே தியாகம் செய்தார் என்ருல் அவருடைய அருங் குணத்தை என்னென்று புகழ்வது!

பள்ளிப் படிப்பு முடிந்தவுடன் கலியாண சுந்தர னுர் பின்னி கம்பெனியிலும், ஸ்பென்ஸர் கம்பெனி யிலும் சிலகாலம் வேலைசெய்தார். சுதந்திரமாக வாழ் வதில் எண்ணமுடைய அவர்க்கு அவ்வேலைகள் பொருந்தியனவாக இல்லை. அதனுல் அவைகளை விட்டுச் சென்னை ஆயிரம் விளக்கில் இருந்த ஓர் ஆரம்பப் பள்ளியில் ஆறு ஆண்டுகள் ஆசிரியராய் அருந்தொண்டாற்றினுர்; பின்னர், வெஸ்லி கல்லூரி யில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றினுர். அக் காலங்களில் அவர் மாணவர்களிடம் காட்டிய பேரன் புக்கு அளவே இல்லை. மாணவர் உளங்கொள்ளுமாறு போதிப்பதில் நம்பெரியார் மிகச் சிறந்து விளங்கினுர். பாட சம்பந்தமான விஷயங்களேயன்றிப் பலதிற மான பொருள்களையும் மாணவர்கள் ஆர்வங்கொள்ளு மாறு எடுத்துக்கூறி அவர்களை ஊக்குவார். அதனுல் இளைஞர்கள் யாவரும் நறுமண மலரை மொய்க்கும் வண்டுகளைப்போல் திரு. வி. க. அவர்களை எப்பொழு

தும் சூழ்ந்து இருப்பர். இதனையறிந்த கல்லூரித் தலைவரும் ஏனைய பேராசிரியர்களும் இவரிடம் பெரு மதிப்புக் கொண்டனர்.

கலியாணசுந்தரனர் தமிழ்ப் பேராசிரியராக இருந்த காலத்தில் நாட்டில் சுதந்திரக் கிளர்ச்சி மிகவும் வலுத்தது. இளமையிலிருந்தே நாட்டுப் பற்றும் சுதந்திர ஆர்வமும் கொண்ட நம் பெரியார் அவர்கள் ஆசிரியர் பதவியை விட்டு அரசியல் கிளர்ச்சியில் ஈடுபடத் துணிந்தார். அதனுல் பலர் தடுத்தும் கேளாமல் தம் தமிழ்ப் பேராசிரியர் பதவியைத் துறந்து 'தேசபக்தன்' என்ற தினசரிப் பத்திரிகையைத் தொடங்கி நாட்டுத்தொண் டாற்றிவந்தார். தென்னுட்டில் சுதந்திர ஆர்வத்தைப் பரப்புவதற்குத் தேசபக்தன் செய்த தொண்டுகள் அளவிறந்தனவாம். தேசபக்தன் மூலமாக மட்டுமன்றித் தமிழ்நாட்டின் மூலை முடுக்கெல்லாம் காங்கிரஸ் இயக்கத்தைப் பரப்பினுர் நம் பெரியார். தென்னுட்டில் காங்கிரசை வளர்த்தவர்களில் சிறப்பாகக் கூறத்தக்கவர் கலியாண சுந்தரனுராவார். காந்தியடிகள் ஆரம்பித்த சத்தியாக் கிரக இயக்கத்தையும் ஒத்துழையாமை இயக்கத்தையும் வளர்க்க திரு. வி. க. பெரும் பாடுபட்டார். அதனுல் அவருக்கு ஏற்பட்ட துன்பங்கள் பல. தேசபக்தனுக்கு ஏற்பட்ட இடையூறுகள் அளவற்றன. ஆகையினுல் அவர் தேசபக்தனை விட்டு விலகி 'நவ சக்தி' என்ற வாரப் பத்திரிகையைத் தொடங்கித் தொண்டு செய்துவந்தார்.

கலியாணசுந்தரனர் நாட்டின் நரம்புகளென விளங்குபவர் தொழிலாளர்களே என்பதை அறிந்து அவர்கள் முன்னேற்றம் கருதி அரும் பாடுபட்டார். அவருடைய பெரு முயற்சியால் 'சென்னைத் தொழி

**லாளர் சங்கம்**' தோன்றியது. தென்னாட்டில் முதன் முதலில் தொழிற் சங்கத்தைத் தொடங்கியவர் திரு. வி. க. அவர்களேயாவர். அவர் உழைப்பால் தொழிலாளர்கள் அடைந்த நன்மைகள் பல. தொழிலாளர் இயக்கத்தில் ஈடுபட்டுப் பல போராட்டங்களை நடத்திய காரணத்தால் நம் பெரியாரை ஒரு சமயம் அரசாங்கத்தார் நாடு கடத்தவும் கருதினர். அறிஞர் சிலர் முயற்சியால் அது தடைப்பட்டது. இங்ஙனம் தம் நலம் கருதாது சேவை செய்த பெரியார் அவர்களைத் தொழிலாளர்கள் இறுதிவரை தம் தந்தையெனவே போற்றிவந்தனர்.

பெரியார் திரு. வி. க. அவர்கள் பெண்கள் பல துறைகளிலும் முன்னேறவேண்டும் என்னும் கருத்துடையவர். பெண்கள் கல்வியறிவில்லாமல், மூடப் பழக்க வழக்கங்களை உடையவராய் வாழ்வதை அவர் வெறுத்தார். 'எதிர்கால உலகை ஆக்கும் பொறுப்பு பெண்களிடமே உள்ளமையால் அவர்கள் அறிவுடையவர்களா யிருத்தல் வேண்டும்; ஆண்களைப் போலவே எல்லாவகைகளிலும் உயர்வு பெற்று விளங்கவேண்டும்,' என்பது அவர் கருத்து. அதற்காக அவர் பெருந்தொண்டு செய்தார். பெண்களின் பெருமையை விளக்கிப் '**பெண்ணின் பெருமை**' என்ற ஒரு நூல் எழுதினர். அந்நூலால் அவர் பெண் குலத்துக்கே பெருந்தொண்டு செய்தார்.

பெரியார் பெண்ணின் பெருமையை உணர்ந்து தொண்டாற்றக் காரணமாயிருந்தவர் அவருடைய மனைவியார் **கமலாம்பிகை** அம்மையாரே யாவர். திரு. வி. க. அவர்களின் திருமணம் 13-9-1912-இல் அவருடைய இருபத்தொன்பதாவது வயதில் நடைபெற்றது. அவருக்கு மனைவியாக வாய்ந்த அம்மை

யார் அறிவாற்றல்களில் சிறந்தவர் ; பெண்களுக்கு வேண்டிய அடக்கம், பொறுமை, சிக்கனம், குடித் தனப்பாங்கு, தொண்டுசெய்யும் குணம், அன்பு, அருள் யாவும் ஒருங்கமைந்தவர். இத்தகைய நல்லா ருடன் திரு. வி. க. அவர்கள் நடத்திய இல்லறம் நல்லறமாய் விளங்கியது என்று கூறவும் வேண் டுமோ ? இவர்கள் இல்லறப் பயனுய் ஆண் குழந்தை ஒன்று பிறந்து ஆறும் மாதத்திலேயே இறந்துவிட் டது. பெண் குழந்தை ஒன்று பிறந்து வளர்ந்து இறந்துவிட்டது. அதனுல் பெரியார் அவர்கள் மக்கட் செல்வம் இல்லாதவரானுர். ஆனுல் தமிழ் நாட்டின் எல்லாக் குழந்தைகளேயும் தம் அன்புக் குழந்தைக ளாகக் கொண்ட பெரியார் அவர்கட்கு அந்நிகழ்ச்சி பெருந் துன்பத்தை அளிக்கவில்லே. எனினும் அவர் வாழ்வு முழுவதும் எண்ணி வருந்தக்கூடிய மற்றொரு நிகழ்ச்சி நடந்தது. அவருடைய அன்பிற்கு உரிய மனேவியார் கமலாம்பிகையார் நோய்வாய்ப்பட்டுத் திருமணம் செய்துகொண்ட ஆறும் ஆண்டிலேயே மறைந்தார். அதனுல் பெருந் துன்பமடைந்த நம் பெரியார் தம் வாழ்நாளின் இறுதிவரை மறுமணம் செய்துகொள்ளவே இல்லே. அவருடைய பேரன்பை என்னென்று புகழ்வது !

கலியாணசுந்தரனுர் அவர்கள் தமிழ் மொழிக்குச் செய்த சேவைகள் அளவற்றனவாகும். அவர் உரை நடை நூல்களாகவும், செய்யுள் நூல்களாகவும் பல அரிய தமிழ் நூல்களே எழுதித் தமிழை வளர்த்தார். செந்தமிழ் மொழியில் அழகான முறையில் உரைநடை நூல்களே எழுதிக் காட்டியவர் பெரியார் அவர்களே யாவர். தமிழ் உரைநடையின் தந்தை என்று அவர் போற்றப் பெறுகிருர். அவர் எழுதிய உரைநடை

நூல்களில் 'மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்', 'முருகன் அல்லது அழகு', 'இளமை விருந்து', 'உள்ளொளி' என்பன சிறப்பாகக் குறிக்கத்தக்கன வாகும். அவர் தம்முடைய வாழ்க்கை வரலாற்றை விரிந்த நூலாக எழுதியுள்ளார். அஃது அவர்காலத் தமிழ்நாட்டின் வரலாருகவே திகழ்கின்றது. அவர் எழுதுவதுபோலவே பேசுவதிலும் வல்லவர். அவர் காங்கிரஸ், சமயம், தொழிலாளர், பெண்கள் முன் னேற்றம் பற்றிப் பேசிய பேச்சுக்களும், பத்திரிகை களில் எழுதிய கட்டுரைகளும் நூல்களாக வெளிவந் துள்ளன. முருகன் அருள் வேட்டல், திருமால் அருள் வேட்டல், பொதுமை வேட்டல், முதுமையின் உளறல் போன்ற பல செய்யுள் நூல்களையும் அவர் இயற்றியுள்ளார்.

இங்ஙனம் எளிய முறையில் வாழ்க்கையைத் தொடங்கித் தம் முயற்சியால் தமிழன்னையின் தலை சிறந்த நன்மகனுய், தொழிலாளர் தலைவராய், காங் கிரஸின் தொண்டராய், சமயச் சீர்திருத்த வாதியாய், பெண்கள் முன்னேற்றத்திற்கு வழிகாட்டியாய், இளை ஞர்களுக்கு எடுத்துக்காட்டாய் விளங்கிய தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்கள் 18-9-53 அன்று இவ்வுலக வாழ்வை நீத்தனர். தமிழ் நாட்டவர் அனை வரும் துன்பக் கடலில் மூழ்கினர். அவர் ஆற்றிய தொண்டுகள் மூலம் அவர் கொள்கைகளை உணர்ந்து அந்நெறியில் நடந்து நாட்டுக்கு உழைப்பதே நாம் அவருக்குச் செய்யும் கைம்மாருகும்.

வாழ்க திரு. வி. க. அவர்களின் திருப்பெயர்!

### குறிப்பு

வழிவழியாக - பரம்பரையாக; எடுத்துக்காட்டு - உதாரணம்; வாய்க்கப்பெற்ற - பொருந்திய; நுண்ணறிவு - நுட்பமான அறிவு; தியாகம் செய்தல் - துறத்தல்; நறுமணம் - நல்ல வாசனை; ஆர்வம் - விருப்பம்; அளவிறந்தன - எல்லை இல்லாதன; நாடு கடத்தல் - நாட்டைவிட்டு வெளியேற்றுதலாகிய ஒரு வகைத் தண்டனை; ஒருங்கு - ஒன்றாக; திகழ்கின்றது - விளங்குகின்றது; கைம்மாறு - பிரதி உபகாரம்.

### வினாக்கள்

1. திரு. வி. க. என்பதன் விளக்கம் தருக.
2. கலியாணசுந்தர முதலியார் பிற்காலத்தில் புகழ்பெற்று விளங்குவார் என்று அனைவரும் கூறக் காரணம் என்ன?
3. முதலியார் அவர்களுக்குத் தம் ஆசிரியரிடம் இருந்த பேரன்பை விளக்கும் நிகழ்ச்சி யாது?
4. திரு. வி. க. பத்திரிகை உலகிற்குச் செய்த தொண்டு யாது?
5. தொழிலாளர்கள் முதலியார் அவர்களை எங்ஙனம் போற்றினர்? ஏன்?
6. தமிழ்ப் பெரியார் 'பெண்ணின் பெருமை' என்னும் நூல் எழுதியமைக்குக் காரணம் யாது?
7. கமலாம்பாளின் குணநலங்களை விளக்குக.
8. திரு. வி. க. தமிழ்மொழிக்குச் செய்த தொண்டுகள் யாவை?
9. திரு. வி. க. இயற்றிய சிறந்த நூல்கள் எவை?

### மொழிப் பயிற்சி

I. அகராதியைப் பார்த்துப் பொருள் அறிக:—போதனை, சேவை, வேட்டல், திண்மை, குழு, திங்கள், பணி, மாவட்டம், வருவாய், ஆண்டு.

II. பிரித்து எழுதுக:—சிற்றூர், அளவேயில்லை, அஃதறிந்த, தென்னாட்டில், பெருந் தொண்டு, தொண்டாற்ற, இருபத்தொன்பது, மக்கட் செல்வம்.

III. சொந்த வாக்கியங்களில் உபயோகிக்கவும்:—வழிவழியாக, அண்மையில், தக்க எடுத்துக்காட்டாகும், கண்ணுங்

கருத்துமாக, ஈடுபட்டு, கண்டித்தனர், செல்வாக்கு, மூலை முடுக்கெல்லாம், அறிவாற்றல், தலைசிறந்த, கைம்மாறு.

IV. எதிர்ப்பதங்கள் தருக :—மறைந்த, அஞ்சாமை, வெறுத்தார், இல்லறம், இறுதி, முதுமை.

V. கீழ்க்கண்ட சொற்கள் எவ்வகைப் பெயர்கள்?

ஆவணி, தொல்காப்பியர், துள்ளம், வால், பொறுமை, முன்னேற்றம்.

VI. உங்கள் நூல் நிலையத்தில் 'இளமை விருந்து' 'முருகன் அல்லது அழகு' என்னும் திரு. வி. க. வின் நூல்கள் இருந்தால் அவற்றைப் படித்துப் பாருங்கள்.

VII. திரு. வி. க. வின் பெருமைகள் என்பதுபற்றி உங்கள் மாணவர் கூட்டத்தில் பேசுவதற்குச் சில குறிப்புக்கள் தயாரிக்கவும்.

## இலக்கணப் பயிற்சி

1. திரு. வி. க. தொழிலாளரை உயர்த்தக் கணக்கற்ற தொண்டுகள் புரிந்தார்.

அச்சம் தவிர்.

மேற்கூறிய வாக்கியங்கள் முறையே செய்தி வாக்கியமும், கட்டளை வாக்கியமும் ஆம். இவ்வாக்கியங்கள் ஒரு செயல் நடப்பதைத் தெரிவிக்கின்றன. இவை உடன்பாட்டு வாக்கியங்களாம்.

2. திரு. வி. க. தொழிலாளரை உயர்த்தப் புரிந்த தொண்டுகள் கணக்கிலடங்கா.

அச்சம் கொள்ளாதே.

இவ்வாக்கியங்கள் செயல் நடவாமையைத் தெரிவிக்கின்றன. இவை இல்லை என்ற பொருளில் வந்தன. இவ்வாக்கியங்கள் எதிர்மறை வாக்கியங்களாம்.

| உடன்பாடு | எதிர்மறை |
|---|---|
| நான் படித்தேன். | நான் படித்திலன். |
| நீ கற்றாய். | நீ கற்றிலை. |
| அவன் வந்தான். | அவன் வந்திலன். |
| அவை மேய்ந்தன. | அவை மேய்ந்தில. |
| உண்மை பேசு. | பொய் பேசாதே. |

கீழ்க்கண்ட வினைகளின் எதிர்மறைகளைக் கூறுக:—வந்தது, விளங்கின, தூண்டியது, தொடங்கினர்.

## 2. சோழ மன்னர்கள்

நம் தமிழகமானது பண்டு மூன்றுபெரும் பிரிவு களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு என்பனவாம். அவற்றை ஆண்ட மன்னர்கள் சேர, சோழ, பாண்டியர் என்ப வராவர். அவர்கள் முடியுடை மூவேந்தர்கள் என வழங்கப்பட்டனர். முடியணிந்து அரசாளும் உரிமை பெற்ற பேரரசர்கள் இவர்களே யாதலால் அவர்கட்கு அப்பெயர் வழங்கியது. அவருக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசர்கள் பலர் தமிழ் நாட்டின் பல சிறு பகுதிகளை ஆண்டுவந்தனர். சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தரும் எக்காலம் முதல் தமிழ் நாட்டை ஆண்ட னர் என்பது ஆராய்ச்சியாளருக்கும் முற்றிலும் விளங்கவில்லை. அவர்கள் சரித்திர அறிவுக்கெட்டாத மிகப் பழங்காலம் முதல் இந்நாட்டை ஆண்டு வந்த னர். அத்தகைய பழமை வாய்ந்த மன்னர்களில் சோழ மன்னரைப் பற்றிய சில விவரங்களை மட்டும் சுருக்கமாக அறிவோம்.

சோழ மன்னர்கள் தெற்கே வெள்ளாறு முதல் வடக்கே வட பெண்ணையாறு வரை பரவிய சோழ நாட்டை ஆண்டுவந்தவர்களாவர். பழைய நூல்களில் இவையே சோழ நாட்டின் எல்லைகளாகக் கூறப் பட்டுள்ளன. சிற்சில சமயங்களில் அவர்களுடைய ஆட்சி இதனினும் வளர்ந்தும் சுருங்கியும் இருந்தது என்று தெரிகின்றது. ஒருசமயம் சோழநாட்டின் ஒரு பகுதியாக விளங்கிய வட ஆர்க்காடு, செங்கற் பட்டு, சென்னை மாவட்டங்களடங்கிய நிலப்பகுதி தொண்டை நாடு என்ற பெயரோடு தனித்தும் விளங்கியது. ஆனால் தஞ்சை, திருச்சி மாவட்டங்கள்

மட்டும் எப்போதும் சோழநாடு என்ற பெயராலேயே வழங்கப்பட்டன. இன்றும் சோழநாடு என்றவுடன் தஞ்சையும் திருச்சியுமே நம் நினைவிற்கு வருகின்றன வன்றோ?

இந்நிலப்பகுதியை ஆண்ட சோழ மன்னர்கள் வீரமும் தீரமும் அறிவும் திருவும் அருந்தமிழ்ப் புலமையும் ஒருங்கே யமைந்த வேந்தர்களாக விளங்கினர். சோழ மன்னர்கள் சூரியனுடைய வழியில் தோன்றியவர்கள் என்று நூல்கள் கூறுகின்றன. அவர்கட்கு வேறு பல பெயர்களும் வழங்கின. அவைகளில் **வளவர்**, **கிள்ளி** என்பன சிறந்தனவாகும். தெய்வத்தன்மை வாய்ந்த காவிரி நதி பாய்ந்து வளம் செய்யும் நீர்வளம் நிலவளம் செறிந்த நாட்டை ஆண்டமையால் அவர்கள் வளவர் எனப் பெயர் பெற்றனர். நிலத்தை உழுது உலகைக் காக்கும் உழவர்கள் நிறைந்த நாட்டை ஆண்டமையால் அவர்கள் கிள்ளி என்றும் பெயர் பெற்றனர். கிள்ளுதல் என்பதற்கு உழுதல் என்பது பொருள். காவிரித் தாயின் கருணையால் வளம் பொருந்திய சோழநாடு **நீர்நாடு** என்றும் **புனல் நாடு** என்றும் புகழ்பெற்று விளங்கியது. 'சோழநாடு சோறுடைத்து' என்ற தொடரும் அந்நாட்டின் செழிப்பை விளக்கும். வளமான காவிரி பாயும் நாட்டுக்கு உரியவர்களாதலின் சோழர்கள் **காவிரி நாடர்** எனவும் புகழ்பெற்றனர்.

சோழ மன்னர்களின் ஆட்சி சங்க காலத்தில் மிகச் சிறந்து விளங்கியது. ஏறக்குறைய கி. பி. நான்காம் நூற்றுண்டுக்குப்பின் தமிழ் நாட்டில் பல்லவர் ஆட்சி வலுப் பெற்றமையால் சோழர் ஆட்சி சிதைந்தது. அப்போது சோழ மன்னர்கள் பெருமை குன்றி வாழ்ந்தனர். கி. பி. ஒன்பதாவது நூற்

றுண்டுக்குப் பிறகு அவர்களுடைய ஆட்சி மீண்டும் செழிக்க ஆரம்பித்தது. இங்ஙனம் சோழர் ஆட்சி இடையில் சிதைந்து பின் வளர்ந்தமையால் சோழர் கள் சங்ககாலச் சோழர் என்றும், பிற்காலச் சோழர் என்றும் குறிக்கப்பட்டனர். சங்ககாலச் சோழமன்ன ரில் சிறந்தவன் **கரிகால் வளவனுவான்.** பிற்காலச் சோழரில் சிறந்து விளங்கிய பேரரசர்கள் இராசராச சோழனும், அவன் மகன் இராஜேந்திர சோழனு மாவர்.

சங்ககாலச் சோழர்கள் திருச்சியை அடுத்துப் பண்டு பெரிய நகரமாக விளங்கிய **உறையூரைத்** தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்தனர். உறையூர் காவிரிக்கரையில் எல்லாவளங்களும் அமைந்த அழகிய பெரு நகரமாகத் திகழ்ந்தது. 'ஊரெனப்படுவது உறையூர்' என்று கூறியதிலிருந்தே அதன் பெருமை நன்கு விளங்கும். அப்பெருநகரம் இன்று தன் பெருமை குன்றித் திருச்சியை அடுத்த சிற்றூராக விளங்குகின்றது. கரிகால் வளவன் அரசாண்டபோது காவிரிப்பூம்பட்டினத்தைச் சோழநாட்டின் தலைநகர மாகக் கொண்டான். காவிரிப்பூம்பட்டினம் காவிரி நதி கடலுடன் கலக்கும் இடத்தில் அமைந்த மிகப் பெரிய நகரமாகும். புகார், பூம்புகார் என்பன அதன் மறுபெயர்கள். கரிகாற் சோழன் உறையூர் உள் நாட்டுப் பட்டணமாக இருந்தமையால் அயல் நாடு களுடன் கப்பல் வாணிகம் செய்வதற்கு இடையூருக உள்ளது என்று கருதிக் கடற்கரையிலமைந்த காவிரிப் பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டான்.

கரிகாலன் காலத்தில் சோழநாடு உலகப் புகழ் பெற்ற நாடாக விளங்கியது. அவன் இமயம் வரை சென்று பல அரசர்களை வென்று பேரரசனுக விளங்கி

ஞன். அவனுடைய ஆற்றலேயும், அவன் தலைநகராகிய காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பையும் அவனைப் புகழ்ந்து பாடப்பட்ட பட்டினப்பாலை என்ற நூலின் மூலமாக அறியலாம். காவிரிப்பூம்பட்டினத்தில் பல நாட்டவரும் வாழ்ந்தனர். உள்நாட்டிலும் வெளிநாட்டி லும் வாணிகம் செழித்து விளங்கியது. நாகரிகம் சிறந்தோங்கியிருந்தது. தற்கால நாகரிகச் சின்ன மாக விளங்கும் கலங்கரை விளக்கம் முன்பே அங் கிருந்தது. மற்றும் இவை போன்ற பற்பல உண்மை கள் அந்நூலிலிருந்து விளங்குகின்றன. காவிரிப்பூம் பட்டினத்தைப் பற்றியும் அதன் பெரிய துறை முகத்தைப் பற்றியும் வெளி நாட்டிலிருந்து நம் நாட்டிற்கு வந்து சென்ற யாத்திரிகர்கள் சிறப்பாகக் கூறியுள்ளனர். அவர்கள் குறிப்புக்களாலும், நம் நாட்டு நூல்களில் காணப்படும் குறிப்புக்களாலும் அத்துறைமுகமே அக்காலத்தில் தமிழ் நாட்டில் உலகம் போற்றும் பெரிய துறைமுகமாகத் திகழ்ந்தது என்பது விளங்குகிறது.

பிற்காலச் சோழர்கள் முக்கியமாகத் தஞ்சா வூரைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டனர். அம் மன்னர்களில் சிறந்தவனுகிய இராசராசசோழன் தன் ஆட்சியில் ஏனைய சேர, பாண்டிய நாடுகளையும் வென்று பேரரசனுக விளங்கினுன். அவன் இலங்கை சென்று அதனையும் வென்று தன் வீரத்தை நிலை நாட்டினுன். இராசராசன் சிறந்த சிவபக்தன். தஞ்சா வூரில் அவன் கட்டிய பெரிய கோயில் இன்றும் அவன் பெருமையை விளக்கும் அடையாளமாக உள்ளது. அவன் மகனுகிய இராசேந்திரன் தந்தை யைப் போலவே பெருவீரனுகத் திகழ்ந்தான். அவன் கங்கைவரை சென்று பகைவர்களை வென்ருன்;

பர்மாவையும் வென்று புகழ் நாட்டினுன். தன் தந்தையைப் போலவே அவனும் திருச்சியை அடுத்த ஓர் ஊரில் ஒரு பெரிய கோயிலேக் கட்டினுன். அது கங்கை கொண்ட சோழீச்சுவரம் என்று வழங்கப்பட்டது. கங்கைவரை சென்று வென்ற அவன் தன் வெற்றிக்கு அடையாளமாக அவ்வூரில் பெரிய ஏரி ஒன்று வெட்டுவித்தான். அதில் கங்கையிலிருந்து கொண்டு வந்த நீரைப் பெய்து அதற்குச் 'சோழ கங்கம்' என்று பெயரிட்டான். அவ்வூர் 'கங்கை கொண்ட சோழ புரம்' என்று அவன் பெயராலேயே வழங்கப்பட்டது. அவன் காலத்தில் அவ்வூரே தலேநகராக இருந்தது என்றும் தெரிகின்றது.

இங்ஙனமாகப் புகழ்பெற்ற சோழ மன்னர்கள் புலியைத் தமக்குரிய அடையாளமாகக் கொண்டனர். சோழர்களுடைய கொடி புலிக்கொடி யாகும்; அடையாள முத்திரையும் புலியே யாகும். அவர்கள் விரும்பி யணிந்த மாலே ஆத்திமாலே யாகும்.

சோழ மன்னர்கள் தமிழ் மொழி வளர்ச்சிக்குச் செய்த சேவைகளும் அளவற்றனவாம். எண்ணற்ற தமிழ் நூல்கள் அவர்கள் உதவியால் தோன்றின. கம்பர் இயற்றிய **கம்பராமாயணம்** குலோத்துங்க சோழன் வேண்டுகோளால் இயற்றப்பட்டதேயாகும். அநபாய சோழன் என்ற மற்ருேர் அரசன் வேண்டுகோளாலேயே சேக்கிழார் **பெரியபுராணம்** பாடினுர் இராசராச சோழன் சிதம்பரத்தில் மறைத்து வைக்கப் பட்டிருந்த தேவாரத் திருமுறைகளேக் கண்டறிந்து அவற்றைச் செல்லின் வாயினின்றும் காப்பாற்றித் தமிழ் நாட்டுக்கு வழங்கினன். அதனுல் அவன் **திருமுறைகண்ட சோழன்** என்று புகழ் பெற்ருன்.

இங்ஙனம் எல்லாவகையிலும் சிறந்து நல்லாட்சி

நடத்திய சோழர்களாட்சியும் இறுதியில் அழிந்து விட்டது. நம் அருமைத் தமிழ்நாடு அந்நியர் வசப் பட்டு அல்லல் உற்றது. இன்று நாம் உரிமை பெற் றுள்ளோம். இனிப் பண்டைக்காலச் சோழர் ஆட்சி யைப்போன்ற தலைசிறந்த ஆட்சியை நம் நாட்டில் நிலைநிறுத்தப் பாடுபடுவோமாக.

### குறிப்பு

தொண்டைநாடு--தொண்டைமான் என்னும் அரசனால் ஆளப் பட்ட நாடு. சங்ககாலம்—சுமார் 1800 வருஷங்கட்கு முற்பட்ட காலம்; காவிரிப்பூம் பட்டினம்—முற்காலத்தில் காவிரியாறு கடலோடுகலக்கும் இடத்தில் அமைந்திருந்த அழகிய துறைமுகப் பட்டினம்; பட்டினப்பாலை—கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடிய நூல். இது பத்துப்பாட்டு என்னும் தொகைநூலில் ஒன்று. தேவாரம்—சைவசமயாசாரியராகிய சம்பந்தர், சுந்தரர், அப்பர் ஆகிய மூவரும் பாடிய பாடல்களின் தொகுதி; திருமுறை—சைவ நூல்களின் பகுப்பு முறை.

### வினாக்கள்

1. முடியுடை மூவேந்தர்கள் யாவர்? அவர் அங்ஙனம் வழங்கப்பெற்ற காரணம் யாது?

2. சோழநாட்டின் எல்லைகள் யாவை?

3. சோழர்களின் வேறுபெயர்களைக் காரணத்தோடு விளக்குக.

4. கரிகால் வளவன் எவ்வூரைத் தலை நகரமாகக் கொண் டான்? ஏன்?

5. பட்டினப்பாலையால் அறியப்படும் செய்திகள் யாவை?

6. இராசராசன் வீரத்தையும் பக்தியையும் சான்று தந்து விளக்குக.

7. சிறு குறிப்பு வரைக: கங்கை கொண்ட சோழீச்சுவரம், சோழ கங்கம், திருமுறை கண்ட சோழன்.

8. சோழர்தம் கொடியும் முத்திரையும் மாலையும் யாவை?

9. சோழமன்னர்கள் தமிழ் வளர்ச்சிக்குச் செய்த சேவை களைக் கூறுக.

### மொழிப் பயிற்சி

I. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக :—புலமை, புனல், செறிந்த, சின்னம், செல், அல்லல், உரிமை, ஆற்றல்.

II. பிரித்து எழுதுக :—முடியுடை மூவேந்தர்கள், சிற்றரசர், அருந்தமிழ், சோறுடைத்து, பெருவீரன், நல்லாட்சி.

III. எதிர்ப்பதங்கள் தருக :—சிதைந்தது, சிற்றூர், பேரரசன்.

IV. சொந்த வாக்கியங்களில் பயன்படுத்துக :—நாகரிகச் சின்னம், நிலை நாட்டினான்.

V. கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்கள் அமைக்க :—

1. சோழநாடு வடக்கே ——— முதல் தெற்கே ——— வரை பரவியிருந்தது.
2. சோழர்களுக்குக் ———, ——— என வேறு பெயர்கள் உண்டு.
3. ——— காவிரிப்பூம்பட்டினம் என்னும் நகரைத் தன் தலை நகராகக் கொண்டான்.
4. ——— என்னும் புலவர் ——— சோழன் காலத்தில் பெரிய புராணத்தை இயற்றினார்.
5. ——— சோழன் கங்கைகொண்டசோழ புரத்தை நிறுவினான்.

VI. பிற்காலச் சோழரின் சமயத் தொண்டுகள் என்பதைப் பற்றி இருபது வரிகளில் கட்டுரை எழுதுக.

## இலக்கணப் பயிற்சி

I. அக்காலம், இப்போது, அவர்கள், அவை, அவற்றை—— இப்பெயர்கள் பொருள்களைச் சுட்டுகின்றன. எனவே இவை போன்ற சொற்கள் சுட்டுப் பெயர்களாம்.

II. எவன்? எது? எவை? எவர்? யாவன்? —— இவை வினாப் பொருளில் வந்தன ; இவை போன்ற சொற்கள் வினாப்பெயர் களாம்.

III. 1. நேற்றுப் பாடினான் இன்று வந்தான்.
2. நன்கு கற்றவனுக்குப் பரிசு கிடைக்கும்.
3. கடவுளை நம்பினோர் கைவிடப் படார்.

இவ்வாக்கியங்களில் பாடினான், கற்றவனுக்கு, நம்பினோர் என்னும் சொற்கள் பாடுதல், கற்றல், நம்புதல் என்ற வினைகளைக் குறிக்காமல் அச்செயல்களைப் புரியும் பெயர்களையே குறிக்கின்றன. இங்ஙனம் வினையுடன் கூடிய இப்பெயர்கள் வினையாலணையும் பெயர்கள் எனப்படும்.

IV. இப்பாடத்தின் முதற் பத்தியிலுள்ள வாக்கியங்களில் எழுவாய் பயனிலை செயப்படு பொருள்களைத் தேர்ந்து எழுதுக.

# 3. சொற் சாதுரியம்

சாதுரியம் என்பது சமயத்திற்கேற்றவாறு பேசித் தாம் கருதியதை முடிக்கும் திறமையாகும். பழந் தமிழ்ப் புலவர்கள் தமிழறிவோடு சந்தர்ப்பத்திற்குத் தகுந்தவாறு சாதுரியமாகப் பேசுவதிலும் திறமை பெற்றிருந்தனர். புலவர்களும், தமிழறிஞர்களும் ஒன்றுகூடி அளவளாவும் போது நகைச்சுவை தோன்ற இரு பொருள்படும்படி பேசி மகிழ்வர். அத்தகைய பேச்சுக்கள் வேடிக்கைப் பேச்சுக்களே யாயினும் அவர்களுடைய ஆற்றலை விளக்குவனவாக இருந்தன. அவற்றில் சிலவற்றை அறிந்து கொள்வது உங்கட்கும் மகிழ்ச்சியை உண்டாக்கும்.

## 1. பனிக்காலம் நன்று

ஒரு நாள் புலவர் ஒருவர் தம் மாணவர்களுடன் விடியற் காலையில் நீராடுவதற்காகப் போனார். அவரோடு அவருடைய நண்பராகிய மற்றொரு புலவரும் சென்றார். அப்போது குளிர் காலம். விடியற் காலத்தில் மிகுதியாகப் பனியும் பெய்து கொண்டிருந்தது. அதனால் எதிரே வருகின்றவருடைய உருவத்தைக் கூட நன்றாக அறிந்து கொள்ள இயலவில்லை. அத்தகைய பனியில் ஆற்றில் நீராடியமையால் புலவர் இருவர்க்கும் குளிர் அதிகமாகி விட்டது. குளிரால் அவர்தம் உடல்கள் நடுங்கின. அப்போது புலவர் தம் நண்பரை நோக்கி, "பனிக் காலம் கொடிது!" என்று கூறினார். அது கேட்ட நண்பர், "பனிக்காலம் நன்று," என்று கூறினார். இருவரும் தங்களுக்குள்ளேயே சிரித்துக் கொண்டனர். உடனிருந்த மாணவர்கட்கு அவர்கள் சிரித்ததன்

கருத்து விளங்கவில்லை. தம் ஆசிரியர் பனிக்காலம் கொடிது என்று கூறியதை அவர் நண்பர் மறுத்துப் பனிக்காலம் நன்று என்று கூறினரே. அஃது எங்ஙனம் பொருந்தும்? இவ்வாறு தவருகக் கூறியும் இருவரும் சிரித்து மகிழ்ந்தது ஏன் என்று புரியாமல் தம் ஆசிரியரையே அச் சந்தேகத்தைக் கேட்டனர். ஆசிரியர், "நான் பனிக்காலம் கொடிது என்றேன்; அவரும் அதனையேதான் வேறு வகையாகக் கூறினர்," என்ருர். மாணவர், "அஃது எங்ஙனம்?" என்று வினவினர். ஆசிரியர், "பனிக்காலம் நன்று என்பதனைப். பனிக்கு ஆலம் நன்று என்றும் பிரிக்கலாமன்ரே? அப்போது அது பனியைக் காட்டிலும் ஆலகால விஷமே மேலானது என்று பொருள்படும். ஆலகால விஷத்தினும் பனி கொடியதாயுள்ளது என்பது அவர் கூறியதன் கருத்தாகும். ஆகையால் நான் கூறியதையேதான் அவரும் கூறினர்," என்ருர். அது கேட்ட மாணவர்கள் புலவர் இருவர்தம் அறிவையும் வியந்து பாராட்டி மகிழ்ந்தனர்.

## 2. கூடப் படித்தவர்

திரிசிரபுரம் மீனுட்சிசுந்தரம் பிள்ளை என்பவர் பெரும் புலவராவார். அவரிடம் தமிழ் கற்றுப் பெரும் புலவராகத் திகழ்ந்தவர் பலர். நாராயணசாமிச் செட்டியார் என்பவரும், நமச்சிவாய தேசிகர் என்பவ்ரும் ஒருசாலை மாணவராய்ப் பிள்ளையவர்களிடம் பாடம் கேட்டு வந்தனர். பிற்காலத்தில் இவ்விருவரும் பெரும் புலவராய் விளங்கினர். நமச்சிவாய தேசிகர் என்பவர் பிற்காலத்தில் திருவாவடுதுறை மடத்தில் ஒரு மடாதிபதியாக விளங்கினர்.

ஒரு சமயம் நாராயணசாமிச் செட்டியார் நமச்சி

வாய தேசிகரைக் காணச் சென்ருர். அப்போது அவர் காணிக்கையாக இரண்டு எலுமிச்சம் பழங் களைக் கொடுத்தார். அப்பொழுது தேசிகர், "நீங்கள் கொடுத்தவை இரண்டானுலும் நாலு பழம்," என்று கூறினர். அது கேட்டு வியந்த செட்டியார் எங்ஙனம் என்று வினவினுர். தேசிகர், "நாலுதல் என்ருல் தொங்குதல் என்று பொருளுண்டல்லவா ? நாலு பழம் என்ருல் மரத்தில் தொங்கும் பழம் என்ற கருத்தில் கூறி னேன்; சரிதானே?" என்ருர். செட்டியார் மகிழ்ந்து, "மிகவும் அழகாக இருக்கின்றது," என்று பாராட்டி ஞர். அப்போது தேசிகர், "நான் குறையப் படித்தவன் என்ருலும் கூடப் படித்தவனல்லவா," என்ருர். கூடப் படித்தவன் என்பதற்கு 'அதிகமாகப் படித்தவன்' என்றும், 'அவருடன் படித்தவர்' என்றும் இரு பொருள் படுமாறு தேசிகர் கூறியதைக் கேட்டுச் செட்டியார் பெரிதும் மனமகிழ்ந்து அவரைப் புகழ்ந்து பாராட்டினுர்.

## 3. கொம்பை வெட்டிக் காலை நடு

அந்தகக் கவி வீரராகவ முதலியார் என்பவர் சிறந்த கவிஞர். அவர் பிறவியிலேயே குருடராயினும் தம் முயற்சியால் கல்வி கற்றுப் பெரும் புலவராக விளங்கினுர். அவர் ஒரு சமயம் 'சந்திரவாணன் கோவை' என்று ஒரு நூல் இயற்றி அதனைப் பெரும் புலவர்கள் கூடியுள்ள சபையில் அரங்கேற்றினுர். அவருடைய மாணவன் பாட்டைப் படித்துவர அவர் அப்பாட்டின் பொருளையும் அதில் அமைந்த அழகு களையும் விளக்கிக் கூறி வந்தார். ஓரிடத்தில் ஒரு பெண்ணைப்பற்றிப் புகழ்ந்து பாடும்போது 'முப்பழச் சேற்றில் அமுத வயல் மேலே முளைத்த கரும்போ'

என்று ஓர் அடி வந்தது. புலவர் அதனை விளக்கிக் கூறிக்கொண் டிருந்தார். அக்கூட்டத்திலிருந்த அம்மைச்சி என்ற ஒரு பெண்பாற் புலவர் எழுந்து, "புலவருக்குக் கண் தான் குருடு என்றால் அறிவும் குருடாய் விட்டதோ?" என்று கேட்டாள். அது கேட்ட கவிஞர் சற்றுச் சிந்தித்துத் தம் மாணவனைப் பார்த்து, "கொம்பை வெட்டிக் காலை நடு," என்று கூறினர். உடனே அம்மாணவன் 'முப்பழச் சாற்றில் அமுத வயல் மேலே முளைத்த கரும்போ' என்று பாட்டைப் படித்தான். புலவரும் அதனை விளக்கிப் பொருள் கூறி முடித்தார்.

அக் கூட்டத்திலிருந்த மற்றையவர்களெல்லாம் அப்புலவர் கேட்ட கேள்வியின் கருத்தும், 'கொம்பை வெட்டிக் காலை நடு' என்று கவிஞர் கூறியதன் பொருளும் விளங்காமல் திகைத்தனர். அவர்கள் புலவரை நோக்கி அதன் கருத்தை விளக்கிக் கூற வேண்டினர். அப்போது வீரராகவ முதலியார் கரும்பு சேற்றில் விளையாத பயிர்; என் பாட்டில் 'அமுதமாகிய வயலில் முப்பழமாகிய சேற்றில் முளைத்த கரும்போ' என்று பாடியிருந்தேன். அதனையே அப்புலவர் குறிப்பாகத் தவறு என்று தெரிவித்தார். அதனை அறிந்த நான் கொம்பை வெட்டிக் காலை நடு என்று மாணவனுக்குக் கூறினேன். 'சே' என்ற எழுத்தில் முதலிலுள்ளதற்குக் கொம்பு என்று பெயரல்லவா? அதனை எடுத்து விட்டு 'ச' என்ற எழுத்திற்குப் பக்கத்தில் ஒரு காலைப் போடு என்று கூறினேன். 'ச' என்ற எழுத்துடன் காலைச் சேர்த்தால் 'சா' ஆகுமல்லவா? என் குறிப்பை அறிந்த மாணவன் சேற்றில் என்பதனைச் 'சாற்றில்' என்று மாற்றிப் படித்தான். இப்போது முப்பழங்களின் சாற்றையே

நீராகப் பாய்ச்சி விளைத்த கரும்பு என்று பொருளும் சரியாய் விட்டது என்றனர். அனைவரும் கவிஞரின் சமயத்திற்குத் தக்க அறிவையும் மாணவனுடைய மதி நுட்பத்தையும் புகழ்ந்து கொண்டாடினர்.

## 4. பணத் தட்டு

ஒரு சமயம் புலவர் ஒருவர் ஈகைக் குணம் உடைய அரசர் ஒருவரை அடைந்து அவரைப் பற்றிப் புகழ்ந்து பாடினர். அதனால் மனம் மகிழ்ந்த அரசன் அவருக்கு அழகிய பொன் தட்டில் வேண்டிய பொன்னும் பொருளும் வைத்து அவற்றைப் பரிசிலாக வழங்க எண்ணினர். பொன் தட்டைக் கண்ட புலவர்க்கு அதன்மீது ஆவலுண்டாயிற்று. அதனால் அவர், ''பணத்தட்டு புலவர்க்கோ அரசர்க்கோ,'' என்று கேட்டார். அவர் கருத்தறிந்த அரசர் அவர் சாதுரியத்தை மெச்சிப் பணத்தோடு பொன் தட்டையும் அவருக்குப் பரிசாக வழங்கினர். பணத்தட்டு என்பதற்கு பணம் வைத்துள்ள தட்டு என்றும், பணமுடை என்றும் இரண்டு பொருள் உண்டு. புலவர்கள்தாம் ஏழைகள்; அவர்களுக்குத் தான் பணத்தட்டு (பணமுடை) உண்டு; அரசர்க்கு ஏன் பணத்தட்டு என்று புலவர் சாதுரியமாகக் கூறியதைக் கேட்டே அரசர் மகிழ்ந்து அப்பரிசை வழங்கினர்.

## 5. ஆயிரத்தில் ஒருவர்

கவிச் சக்கரவர்த்தி எனப் புகழ் பெற்ற கம்பர் தாம் பாடிய சிறந்த நூலாகிய இராமாயணத்தைத் திருவரங்கத்தில் உள்ள ஆயிரக்கால் மண்டபத்தில் அரங்கேற்றினர். நாதமுனிகள் என்ற பேரறிஞர் அக் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். பெரும் புலவர்களும் கடவுள் பக்தர்களும் திரளாகக் கூடியிருந்

தனர். அனைவரும் கம்பர் இராமாயணத்தைப் படித்துக் கூறிய நயமான பொருளைக் கேட்டு அவர் கவித் திறமையைப் பாராட்டினர். முடிவில் அவர்கள் அந் நூலில் ஒரு குற்றம் கூறினர். கம்பர் தம் இராமாயணத்தில் நூறு பாட்டுக்கு ஒரு பாட்டாகச் சடையப்ப வள்ளலைப் புகழ்ந்து பாடியிருந்தமையையே அவர்கள் குற்றமாகக் கருதினர். கம்பரோ தம்மை இளமை முதல் பேரன்புடன் பாதுகாத்து வளர்த்த சடையப்ப வள்ளலுக்குத் தமது நன்றியறிதலைத் தெரிவிப்பதற்கு இதனினும் சிறந்த முறை வேறொன்றும் இல்லையென்று கூறினர். அதுகேட்டு, "தாங்கள் செய்நன்றி மறவாமல் சடையப்ப வள்ளலைப் புகழ்ந்து பாடியது சிறந்ததே; எனினும் கடவுளைப் பற்றிப் பாடிய நூலில் மனிதரைப் பற்றி அதிகமாகப் புகழ்தல் தக்கதன்று; வேண்டுமானால் ஆயிரம் பாட்டிற்கு ஒரு பாட்டாகச் சடையப்பரைப் பற்றிய பாடலை அமைத்துக் கொள்ளுங்கள்," என்று அங்கிருந்தவர்கள் கூறினர். அது கேட்ட கம்பர் மிகவும் சாதுரியமாக, "தங்கள் விருப்பப்படியே செய்கின்றேன்; நான் சடையப்பரை நூறு பேர்களுக்குள் சிறந்த ஒருவராக மதித்தேன்; நீங்கள் ஆயிரத்தில் ஒருவராக மதிக்கின்றீர்கள்," என்று கூறி அங்ஙனமே ஆயிரம் பாட்டிற்கு ஒரு பாட்டில் சடையப்பர் புகழை அமைத்தார். ஒருவரை நூறு பேர்களில் சிறந்தவர் என்று கூறுவதினும் ஆயிரம் பேர்களுள் சிறந்தவர் என்று கூறுவது அவருக்கு அதிகமான பெருமையை அளிக்குமல்லவா? அங்ஙனம் சாதுரியமாகப் பேசிய கம்பரின் சொற் சாதுரியத்தைக் கூட்டத்தவர் யாவரும் வியந்து புகழ்ந்தனர்.

## 6. மல்லிகையும் வண்டும்

கம்பர் காலத்தில் வாழ்ந்த மற்ருெரு பெரும்புலவர் புகழேந்திப் புலவராவர். அவர் வெண்பாப் பாடுவதில் சிறந்தவர். 'வெண்பாவில் புகழேந்தி' என்று அவரை அனைவரும் பாராட்டினர். அப்பெரும் புலவர் இயற்றிய நூலே நளவெண்பா என்ற சிறந்த நூலாகும். அதனைக் குலோத்துங்க சோழ மன்னனின் வேண்டுகோளுக் கிசைந்து அவன் சபையில் அவர் அரங்கேற்றினுர். ஒரு நாள் பிரசங்கத்தில் ஒரு மாலைக்கால வருணனைப் பாடலைப் படித்துப் பொருள் விளக்கிக் கொண்டிருந்தார். அப்பாடலில் 'மல்லி கையே வெண்சங்கா வண்டு ஊத மாலை வந்தது' என்று பாடியிருந்தார். முல்லை மலர்கள் மாலையில் மலரும். மலர்ந்த பூக்களில் வண்டுகள் தேனுண் பதற்காக மொய்க்கும். அந்த இயற்கைக் காட்சியைப் புலவர் மல்லிகைப் பூவாகிய சங்கைக் கொண்டு வண்டு ஊத மாலையாகிய அரசன் வந்தான் என்று வருணித்திருந்தார். அச்சபையிலிருந்த ஒட்டக் கூத்தர் என்ற புலவர் எழுந்து, "இப்பாடல் அழகாக இருந்தாலும் தவருகப் பாடப்பட்டுள்ளது. இப்பாட்டில் மல்லிகையைச் சங்காகவும் அதில் தேன் உண்ண மொய்க்கும் வண்டைச் சங்கை ஊதுபவனுகவும் புலவர் வருணித்துள்ளார். சங்கை ஊதுபவன் அதன் அடிப் பக்கத்திலேயே ஊதுவான். ஆனுல் மல்லிகை மலரில் மேலிருந்தல்லவா வண்டு தேன் குடிக்கும். அதனைச் சங்கு ஊதுபவனுகக் கூறியது எங்ஙனம் பொருந்தும்?" என்று கேட்டார். உடனே புகழேந்திப் புலவர் சாதுரியமாக, "வண்டு தேன் குடித்து மயங்கி யுள்ளது. கட் குடித்து மயங்கியவனுக்கு அடியென்

றும் முடியென்றும் தெரிவதுண்டோ? அதனுலேயே வண்டு மயங்கி மல்லிகையின் நுனியைச் சங்கின் வாயாகக் கருதி ஊதுகின்றது,'' என்று வேடிக்கை யாகக் கூறினர். புலவருடைய சாதுரியமான பேச்சைக் கேட்டு அனைவரும் ஆரவாரித்தனர். அவருடைய நுண்ணறிவைப் போற்றிப் புகழ்ந்தனர்;

மாணவர்களே! இங்ஙனமே நம் பழந்தமிழ்ப் புலவர்தம் வாழ்க்கையில் பல சிறந்த நிகழ்ச்சிகளைக் கூறலாம். உங்களுடைய வாழ்க்கையிலும் சில சமயங்களில் நண்பர்களோடு அளவளாவுங்கால் மேலே கூறியன போன்ற சாதுரியமான நிகழ்ச்சிகள் நடைபெறலாம். அவற்றையெல்லாம் மறந்து போகா மல் குறித்து வைத்தால் பின்னர் இதுபோலப் பலருக்கும் எடுத்து கூறி மகிழச் செய்யலாமன்றோ?

## குறிப்பு

அளவளாவுதல் - கலந்துபேசி இன்புறுதல்; திரிசிரபுரம் - திருச்சிராப்பள்ளி; ஒருசாலை மாணவர் - ஒரே வகுப்பில் கல்வி பயிலும் மாணவர்; மடாதிபதி - மடத்துத் தலைவர்; முப்பழம் - மா, பலா, வாழை; மதிநுட்பம் - கூர்மையான அறிவு; கவிச் சக்கரவர்த்தி - புலவர்களில் தலை சிறந்தவர். அரங்கேற்றுதல் - புலவர் தாமியற்றிய நூலைக் கற்றறிந்த புலவர் அவையில் கூறி அவர்களை ஏற்றுக் கொள்ளச் செய்தல்.

## வினுக்கள்

1. சொற் சாதுரியமாவது யாது?

2. 'பனிக்காலம் நன்று' இதிலமைந்த சாதுரியத்தை விளக்குக.

3. நாலு பழம், கூடப் படித்தவர்—இவற்றிற்கு இரு பொருள் கூறுக:—

4. 'புலவர்க்குக் கண்தான் குருடு என்றால் அறிவும் குருடாய் விட்டதோ?'—சந்தர்ப்பம் கூறுக.

5. 'கொம்பை வெட்டிக் காலை நடு' இதன் கருத்தை விளக்குக.

6. புலவர் ஒருவர் சாதுரியமாகப் பேசிப் பொன் தட்டைப் பரிசு பெற்ற நிகழ்ச்சியை எழுதுக.

7. கம்பரின் சொற் சாதுரியத்தை விளக்க ஓர் உதாரணம் தருக.

8. புகழேந்திப் புலவரின் பாடலில் எடுத்துக் காட்டப்பட்ட குற்றம் யாது? அதற்கு அவர் கூறிய நயமான பதில் யாது?

## மொழிப் பயிற்சி

I. அகராதி பார்த்துப் பொருளறிக :—சந்தர்ப்பம், ஆலம், அந்தகன், மொய்க்கும்.

II. சொந்த வாக்கியங்களில் பயன்படுத்துக: அளவளாவுதல், திகைத்தனர், மதிநுட்பம், நயமான, ஆரவாரித்தனர்.

III. பிரித்து எழுதுக :—பிற்காலம், இவ்விருவரும், மடாதிபதி, முப்பழம், பேரறிஞர், வெண்சங்கு, நுண்ணறிவு.

IV. ஒருமைக்குப் பன்மையும் பன்மைக்கு ஒருமையும் கூறுக :—மாணவர், சொல், நண்பன், படித்தவன், நான், நீ, வந்தன, சென்றீர், படித்தோம், கேட்டனர்.

V. இப்பாடத்தில் கூறப்பட்டுள்ள சாதுரிய வசனங்களைப் போல இரு பொருளமைந்த வேறு தொடர்களை எழுதுக.

## இலக்கணப் பயிற்சி

1. வெற்றிலை தின்றான்.

2. வெற்றிலை நட்டான்.

இவற்றில் முதலில் உள்ள தொடரில் வெற்றிலை என்பது இலையையே குறிக்கிறது. இரண்டாவது தொடரில் இலையை நடுவதில்லையாதலால் வெற்றிலை என்பது கொடியைக் குறிக்கிறது. வெற்றிலை என்ற சொல் அதனோடு தொடர்புடைய கொடிக்குப்

பெயராக வருகிறது. எனவே இஃது ஆகு பெயராம். இலையைக் குறிக்கும் போது வெற்றிலை என்னும் சொல் இயற் பெயராகும்.

ஒன்றன் இயற்பெயர் அப்பொருளைக் குறிக்காமல் அதனோடு தொடர்புடைய வேறொன்றிற்குப் பெயராகி வருவது **ஆகு பெயராம்.**

1. கமலத்தினுடைய முகம் **தாமரை** போல் மலர்ந்தது.
2. கோபாலன் அடைந்த வெற்றி குறித்துப் **பள்ளிக் கூடமே** பெரிதும் மகிழ்ந்தது.
3. எங்கள் நிலத்தில் நாளை **கார்** அறுவடையாகும்.
4. **தலைக்கு** ஒரு பழம் கொடு.
5. **வெள்ளையை** ஏரில் பூட்டு.
6. நான் காலையில் **பொங்கல்** உண்டேன்.

இவ்வாக்கியங்களில் தடித்த எழுத்துக்களில் உள்ள சொற்களைக் கவனிக்க. இவை ஆகு பெயர்களாம்.

1. தாமரை என்னும் கொடியின் (முதற் பொருளின்) பெயர் மலரைக் (சினைப்பெயரை) குறிக்கிறது. எனவே இது **பொருளாகு பெயராம்.** இதனை **முதலாகு பெயர்** என்றும் கூறுவர்.

2. பள்ளிக்கூடம் என்னும் இடத்தின் பெயர் பள்ளிக்கூட மாணவர்களைக் குறிக்கிறது. எனவே இது **இடவாகு பெயராம்.**

3. கார் என்னும் காலத்தின் பெயர் அக்காலத்தில் விளையும் நெல்லைக் குறிக்கிறது. இது **காலவாகு பெயராம்.**

4. தலை என்னும் உறுப்பின் (சினையின்) பெயர் மனிதனைக் குறிக்கிறது. இது **சினையாகு பெயராம்.**

5. வெள்ளை என்னும் குணத்தின் (பண்பின்) பெயர் வெள்ளை நிறமுடைய காளையைக் குறிக்கிறது. இது **பண்பாகு பெயராம்.**

6. பொங்கல் என்னும் தொழிலின் பெயர் அத்தொழிலினால் ஆன உணவைக் குறிக்கிறது. இது **தொழிலாகு பெயராம்.**

# 4. குழலும் யாழும்

தமிழ் மொழி இயல், இசை, நாடகம் என்ற மூன்று பிரிவுகளையுடையது. இயல் என்பது இலக்கண இலக்கியங்களைக் குறிக்கும். இசை என்பது பண்ணுடன் தாளம் அமையப் பாடுவதாகும். நாடகம் இயல், இசை, இவற்றுடன் நடிப்பும் சேர்ந்ததாகும். இவற்றுள் இசைத் தமிழ் கற்ருர் கல்லார் அனைவரையும் வயப்படுத்தக் கூடியதாகும். அதனுலேயே அஃது அவ்வரிசையில் நடுநாயகமாக அமைந்துள்ளது. இயற்றமிழ்ச் செய்யுட்களும் இசையுடன் பாடப்படுகின்றன. நாடகத்திற்கு இசை மிக இன்றியமையாததாகும். இசையில்லாத நாடகம் உயிரில்லாத உடம்பு போன்றதாம்.

இசை என்ற சொல் மனத்தை ஒன்றுபடுத்தக் கூடியது என்று பொருள் தரும். இசைக்கு உருகாதார் ஒருவரும் இல்லை எனலாம். கொடிய பாம்பும் இசை கேட்டு ஆடுகின்றது. எருதும் இசைகேட்டு உழுது வருகின்றது. யானை போன்ற கொடிய வனவிலங்குகளும் இசைக்கு வயப்படுமாம்.

பாரம் தூக்குவோர் இசை பாடுவதை நீங்கள் கவனித்திருக்கின்றீர்களா ? ஏன் அவர்கள் பாடுகின்றனர் ? இசையினுல் தம்மை மறந்துவிட முடியும். அப்போது பாரம் அவர்கட்கு அதிகமாகத் தெரியாது என்பதற்காகவே. இங்ஙனமே ஏற்றமிறைத்தல், நெல் குற்றுதல் முதலிய பற்பல தொழில் புரிகின்றவர்களும் இசை பாடிக்கொண்டே தம் தொழிலைச் செய்கின்றனர். பற்பல விளையாட்டுக்களிலும் இசைப் பாட்டுக்கள் கலந்துள்ளன.

இங்ஙனம் எல்லா உயிர்களையும் மகிழ்விக்கக்

கூடிய இசை மக்கள் வாழ்வோடு பிரிக்கமுடியாத வாறு கலந்துள்ளது. இக்காரணம் பற்றியே இசையை நம் முன்னோர்கள் தமிழின் பிரிவிலேயே ஒன்றாக அமைத்து அதற்கு வேண்டிய இலக்கணங்களையும் வகுத்துக் கூறியுள்ளனர்.

மக்களின் இனிய குரலே சிறந்த இசையைத் தருவதாம். இசை வாணரின் குரலைப் பல இசைக் கருவிகள் சிறப்பிக்கின்றன. இசைக் கருவிகள் பற்பல நம் நாட்டில் வழங்கிவந்தன. அவை துளைக்கருவி, நரம்புக் கருவி, தோற்கருவி, கஞ்சக்கருவி என நான்கு வகைப்படும். துளைக் கருவிகளில் குழல் சிறந்ததாகும். நரம்புக் கருவியில் யாழ் மிகச் சிறந்த தாகும். இவ்விரண்டுமே தமிழ் நாட்டின் மிகப் பழைய இசைக் கருவிகளாகும். இவற்றிலும் முதலில் தோன்றிய இசைக்கருவி குழலே என்று அறிஞர் கூறு கின்றனர்.

குழல் என்ற இசைக்கருவி இயற்கையாகத் தோன்றியதாகும். மலையை அடுத்த காடுகளில் மூங்கில் மிகுதியாக வளரும். அங்ஙனம் வளர்ந் துள்ள மூங்கில்களில் ஒருவகைப் புழு துளைத்துத் துவாரம் செய்வது இயற்கையாகும். நம் வீடுகளில் உள்ள மூங்கில்கள் சில சமயங்களில் உளுத்துப் போகின்றன அன்றோ? அம்மூங்கில்களில் நீங்கள் சிறுசிறு துவாரங்களைப் பார்க்கலாம். அவைகளும் ஒருவகைப் புழுக்களால் ஏற்பட்டனவேயாம். இங் ஙனம் காடுகளில் வளர்ந்துள்ள மூங்கில்களில் ஏற் பட்ட துவாரங்களில் வேகமாக வீசும் காற்றுப் புகுந்து வெளிப்படும்போது ஒருவகை இசை உண்டாகும். அதனைக் கூர்ந்து கவனித்த மனிதன் அதுபோலத் தானே மூங்கிலில் துளைகளைச் செய்து ஊதிப் பார்த்

தான்; அதிலிருந்து மிக இனிய ஓசை உண்டா வதைக் கண்டான். அதனைப் பலருக்கும் இசைத்துக் காட்டினுன். அவ்வழக்கம் எங்கும் பரவலாயிற்று. மக்கள் மேன்மேலும் அதனை ஆராய்ந்து ஏழு துவாரங்களைச்செய்து ஏழுவகைச் சுரங்களை இசைக் கக் கற்றுக்கொண்டனர். இங்ஙனமே குழல் தோன் றியது.

புல்லாங்குழல், வேய்ங்குழல் என்பன குழலைக் குறிக்கும் வேறு சொற்கள். புல் என்பது வெளியே வயிரம் உடைய தாவரங்களைக் குறிக்கும் சொல்லாம். உள்ளே வயிரமுடைய தாவரம் மரம் எனப்படும். மூங்கில் வெளியே வயிரம் உடையதாதலின், அது புல் எனப்பட்டது. புல்லால் ஆகிய குழல் புல்லாங் குழலாம். வேய் என்பதும் மூங்கிலைக் குறிக்கும் மற்றொரு சொல்லாம். ஆதலால் வேய்ங்குழல் என் பதும் புல்லாங்குழலைக் குறிக்கும்.

குழல் கேட்பவருள்ளத்தை உருகச் செய்யும் சிறந்த இசைக் கருவி யாகும். அதைப்போல உள்ளம் உருக்கும் இசைக்கருவி வேறு இல்லை என்றே கூற லாம். உலகங்களைக் காக்கும் கடவுளாகிய கண்ண பிரான் விரும்பிக் கைக்கொண்டது வேய்ங்குழலே யன்றோ? கண்ணன் வேய்ங்குழலூதிப் புரிந்த விந்தைகளுக்கு அளவுண்டோ? காடுகளில் ஆயர் சிறுவர்களுடன் மாடுகளை மேய்த்துவரச் சென்ற கண்ணபிரான் மாலைக் காலத்தில் குழிலிசைப்பாராம். அவ்விசை கேட்டுப் பல இடங்களில் மேயும் மாடுகள் யாவும் ஒருங்கு திரண்டு ஊருக்கு வருமாம். கண்ணன் இசைக்கும் குழலிசை கேட்டுப் பட்ட மரங்களும் தளிர்க்குமாம். பசுக்களும் மடியிலிருந்து பால் சொரியுமாம். அஃறிணை உயிர்களே இவ்வளவு

மகிழ்ந்தன என்றால் மக்களடைந்த மகிழ்ச்சிக்கு அளவும் இருக்குமோ?

யாழ் குழலைப்போலவே இயற்கையாகத் தோன்றிய மற்றும் ஓர் இசைக் கருவியாகும். பண்டைக் காலத்தில் மக்கள் காடுகளில் மிருகங்களையும், பறவைகளையும், வேட்டையாடி உண்டு வாழ்ந்தனர்; வேட்டைக்குப் பயன்பட்ட வில்லின் நாண் அதிர்ந்து முழங்கும் ஓசையைக் கேட்குந்தோறும் அது போல ஒரு கருவி செய்து இசைக்க முடியுமா என்று மக்கள் ஆராய்ந்தனர்; குமிழ மரம் என்ற ஒருவகை மரத்தின் கொம்பை வளைத்து மரல் என்ற நாரினை நாணாகக் கட்டிக் கையால் அதனைத் தட்டி இசைத்தனர். அதிலிருந்து காதுக்கினிய இன்னிசை உண்டாகியது. அந்த யாழ் வில் யாழ் என வழங்கப்பட்டது. அவ் வில் யாழே நாளடைவில் ஆராய்ச்சி



சகோட யாழ்



மகர யாழ்

யால் வளர்ச்சியுற்று ஏழு நரம்புகளையுடைய யாழாக மாறியது. ஏழு நரம்பு முதல் பதினாறு நரம்பு வரை

உடைய யாழுக்குச் **சகோட யாழ்** என்று பெயர். மீன் வடிவமாகச் செய்யப்பட்ட அழகான யாழ் ஒன்றும் இருந்தது. அது **மகர யாழ்** என்று வழங்கப் பட்டது. ஆயிரம் நரம்பு கொண்ட யாழ்களும் இருந் தனவாகப் பழைய தமிழ் நூல்களிலிருந்து தெரிகிறது.

மேற்கூறியவற்ருல் யாழ் வாசிக்கும் கலை நம் நாட்டில் மிகச் சிறந்து விளங்கியது என்பது தெரி கின்றதன்ரே? யாழ் வாசிப்பதையே தொழிலாகக் கொண்ட ஓர் இனத்தவரே பண்டைக் காலத்தில் வாழ்ந்துவந்தனர். அவர்கள் **பாணர்** என்றும் **யாழ்ப் பாணர்** என்றும் வழங்கப்பட்டனர். அவர்களில் பல நரம்புகளைக் கொண்ட பெரிய யாழ்களை வாசிப்பவர் **பெரும்பாணர்** எனப் புகழ் பெற்றனர். சிறிய யாழை வாசிப்பவர் **சிறுபாணர்** எனப்பட்டனர். பாணர்களைத் தமிழ்நாட்டு மூவேந்தரும், சிற்றரசர் களும், வள்ளல்களும் பெரிதும் போற்றிக் காத்து வந்தனர். அதனுல் யாழிசை தமிழ்நாடெங்கும் முழங்கியது. தமிழ் நாட்டு யாழ்ப்பாணர்கள் இலங் கைக்கும் சென்று தங்கள் இசையைப் பரப்பினர் என்று தெரிகிறது. **யாழ்ப்பாணம்** என்ற பெய ருடைய நகரம் இலங்கையில் உள்ளமை இதனை விளக்கும்.

யாழும் குழலைப் போலவே மிகவும் மனத்தை உருக்கக்கூடிய இசையைப் பொழியும் கருவியாகும். இதன் சிறப்பைப் பின்வரும் நிகழ்ச்சி நன்கு விளக்கும். இலங்கையை ஆண்ட **இராவணன்** என்ற வேந்தன் பல கலைகளிலும் வல்லவன். இசைப் புலமையில் சிறந்த வன். அவன் அதற்கு அடையாளமாகத் தன் கொடி யிலேயே யாழை அடையாளமாகப் பொறித்திருந் தான். அவன் யாழ் வாசித்துச் சாமகானம்

செய்து சிவபெருமான் மனத்தை உருக்கி வரங்கள் பல பெற்றவன். இத்தகைய திறமையால் அவன் சிறிது அகந்தை கொண்டான். ஒரு சமயம் அவனுக்கும் பொதிய மலையில் வாழ்ந்த தமிழ் முனிவராகிய அகத்தியர்க்கும் யாழ்ப் போட்டி நடந்தது. யாழ் வாசிப்பதில் தேர்ந்தவராகிய அகத்தியர் உள்ளமும் உருக யாழ் இசைத்தார். அந்த யாழிசையால் அருகிருந்த கருங்கல் பாறையும் நெகிழ்ந்து தளதள என்று உருகியது. அதன்மீது வைக்கப்பட்டிருந்த இலங்கை வேந்தனுடைய யாழ் அதில் அழுந்தியது. அகத்தியர் இசைப்பதை நிறுத்தினர். என்ன ஆச்சரியம்! உருகிய பாறை இசை நின்றவுடன் இறுகியது. அதன்மீது வைக்கப்பட்டிருந்த இலங்கை மன்னனின் யாழ் பொடிப்பொடி யாகியது. அதனுல் இலங்கை மன்னன் பேரவமானம் அடைந்தான்; அகத்தியரின் யாழ் வாசிக்கும் திறமையைப் பெரிதும் பாராட்டினுன். அதுமுதல் அவன் செருக்கைத் துறந்தான். இதனுல் யாழ் இசை கல்லையும் உருக்கும் தன்மை வாய்ந்தது என்பது விளங்குகின்றதன்றே?

இவ்வளவு சிறப்பு வாய்ந்த யாழ் இன்று வழக்கத்தில் இல்லை. யாழுக்குப் பதிலாக அதுபோன்ற வீணை என்ற இசைக் கருவி வழக்கத்தில் உள்ளது. அண்மையில் மறைந்த சுவாமி விபுலானந்தர் என்ற புலவர் பழைய தமிழ் நூல்களில் கூறப்பட்ட இலக்கணங்களைக்கொண்டு அந்த முறையில் ஒரு யாழைச் செய்து காட்டினர். அவர் யாழ் நூல் என்ற பெரிய நூலொன்றும் செய்துள்ளார். அந் நூலில் யாழைப் பற்றிய எல்லா விவரங்களும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

இங்ஙனம் குழலும் யாழும் மிகச் சிறந்த இசைக்

கருவிகளாக விளங்கிய காரணத்தாலேயே உலகம் புகழும் திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர் தம் நூலில் குழந்தைகளின் மழலைச் சொற்களுக்கு யாழையும் குழலையும் உதாரணமாகக் கூறிச் சிறப்பித்துள்ளார்.

இசைக் கருவிகளைப் பற்றிய பல செய்திகளைப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய சங்க இலக்கியங்களிலும், சிலப்பதிகாரத்திலும் விரிவாகக் காணலாம்.

### குறிப்பு

நடுநாயகமாக - மிகச்சிறந்ததாக, (சிறந்த பொருளை நடுவில் அமைத்துக் கூறுவது வழக்கம்.) வயப்படுத்தல் - கவர்தல்; இசைவாணர் - இசையில் வல்லவர்; கஞ்சக் கருவி - வெண்கலத்தால் செய்யப்பட்ட கருவி, தாளம் மணி போன்றவை; நரம்புக் கருவி - வீணை, பிடில் போன்றவை; துளைக் கருவி - நாதஸ்வரம் போன்றவை; தோல் கருவி - மத்தளம் போன்றன; சாமகானம் - சாம வேதத்தைப் பாடுதல்; ஏழுவகைச் சுரங்கள் - ஸ, ரி, க, ம, ப, த, நி என்னும் ஏழு சுரங்கள்; வயிரம் - உறுதி; அதிர்ந்து - அசைந்து.

### வினாக்கள்

1. இசை எங்ஙனம் முத்தமிழில் மிகச் சிறந்ததாகும்?
2. 'அஃறிணைப் பொருள்களும் இசையில் ஈடுபடுகின்றன' — உதாரணங்கள் தந்து விளக்குக.
3. இசை மக்கள் வாழ்க்கையில் பிரிக்கமுடியாதவாறு கலந்துள்ளது என்பதனை விளக்குக.
4. நால்வகை இசைக் கருவிகள் எவை? ஒவ்வொன்றுக்கும் இரு உதாரணங்கள் தருக.
5. குழல் தோன்றிய வகையைச் சுருக்கமாகக் கூறுக.
6. புல்லாங்குழல் என அக்கருவி ஏன் பெயர்பெற்றது?
7. வேய்ங்குழலின் பெருமையைக் குறிப்பிடுக.
8. 'வில் யாழ்' எங்ஙனம் தோன்றியது?
9, யாழிசையின் பெருமையை விளக்குக.

## மொழிப் பயிற்சி

I. சொந்த வாக்கியங்களில் அமைத்தெழுதுக :—

மேன்மேலும், ஒருங்கு திரண்டு, தளதள, நடுநாயக மாக, உள்ளம் உருக்கும், பொறித்தனன்.

II. பிரித்தெழுதுக :—இயற்றமிழ், வேய்ங்குழல்.

III. கீழ்க்கண்ட உடன்பாட்டு வாக்கியங்களைப் பொருள் மாறுபடாமல் எதிர்மறை வாக்கியங்களாக்குக :—

1. இசைக்கு அஃறிணை உயிர்களும் வயப்படும்.
2. தொழிலாளரில் சிலர் வேலை செய்யும்போது பாட்டுப் பாடுகின்றனர்.
3. இசைகேட்டு அனைவரும் உள்ளம் உருகுவர்.
4. நான் வேலனினும் சிறப்பாக யாழ் வாசிப்பேன்.

V. 'குழலின் பெருமை' என்பதுபற்றி இருபது வரிகளில் ஒரு கட்டுரை எழுதிப் பழகுக.

VI. சென்னைப் பொருட் காட்சிச் சாலையில் பலவகைப்பட்ட இசைக் கருவிகளும் பலவகைப்பட்ட யாழ்களும் அமைந்துள்ளன. அங்குச் சென்று அவற்றைக் கண்டு அறிக.

## இலக்கணப் பயிற்சி

I. 1. கொடிய பாம்பும் இசைகேட்டு ஆடுகின்றது.
2. கண்ணன் வேய்ங்குழல் ஊதி ஆடினான்.
3. சிறுவர் யாழ் கேட்டு ஆடுவர்.

இவ்வாக்கியங்களில் உள்ள வினைமுற்றுக்கள் முறையே நிகழ் காலத்திலும், இறந்தகாலத்திலும், எதிர்காலத்திலும் உள்ளன. இச்சொற்களின் இடையில் உள்ள கின்று, இன், வ் என்பன இடைநிலைகள் எனப்படும். இடைநிலைகள் காலம் காட்டும்.

படித்தான், உண்டான், சென்றாய், ஓடினாள்—இவற்றில் முறையே த், ட், ற், இன் என்னும் இடைநிலைகள் இறந்த காலத்தைக் காட்டுகின்றன. இவை இறந்தகால இடைநிலை கள் எனப்படும்.

வருகிறான், காண்கின்றாய், செய்யாநின்றான்—இவற்றுள் வந்துள்ள கிறு, கின்று, ஆநின்று என்பன நிகழ்காலத்தைக் காட்டுகின்றன. இவை நிகழ்கால இடைநிலைகள்.

கேட்பர், செய்வாள்—இங்குள்ள ப், வ் என்பன எதிர் காலத்தைக் காட்டுகின்றன. இவை எதிர்கால இடைநிலைகள்.

இப்பாடத்திலுள்ள முக்கால வினைமுற்றுக்களில் ஒவ் வொன்றுக்கும் ஆறு உதாரணங்கள் எழுதுக. அவற்றில் அமைந்துள்ள இடைநிலைகளைக் குறிப்பிடுக.

# 5. அமுத சுரபி

தமிழ் நாடு அன்னதானத்தில் சிறந்தது. அறங்கள் பலவற்றிலும் பசியால் வாடி வருந்தும் ஏழை மக்களுக்கு உணவளித்துக் காக்கும் அறமே உயர்வானதாகக் கருதப்பட்டது. 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்று அன்னதானத்தின் சிறப்பைப் புலவர்கள் போற்றிப் பாராட்டினர். தமிழ் நாட்டில் வாழ்ந்த அரசர்களும் பெருஞ் செல்வர்களும் அன்ன சத்திரங்கள் பல அமைத்து இவ்வறம் என்றும் நடைபெறுமாறு ஏற்பாடு செய்தனர். இன்றும் எத்தனையோ இடங்களில் அத்தகைய சத்திரங்கள் இருப்பதைக் காணலாம். ஒவ்வொரு நாளும் தங்களை நாடி வந்து உணவு கேட்கும் ஏழை எளியவர்கட்கும், வழிப்போக்கர்கட்கும் உணவளித்துக் காப்பது இன்றும் தமிழ் நாட்டு மக்களிடத்தில் காணப்படும் உயர்ந்த பழக்கமாக இருக்கிறதல்லவா? பண்டைக் காலத்தில் அன்னதானம் செய்து அழியாப் புகழ்பெற்ற ஏழைச் சிறுவன் ஒருவன் இருந்தான். அவனுடைய வரலாற்றை நீங்கள் அறிந்துகொள்ளவேண்டியது மிகவும் அவசியமாகும்.

'சோறுடையது' என்று புகழ்பெற்ற சோழ வள நாட்டில் உறையூரை அடுத்த ஒரு சோலையில் தாய் தந்தை இல்லாத அநாதைக் குழந்தையொன்று அழுது கொண்டு கிடந்தது. அக்குழந்தையின் பசி நோயை அறிந்த ஒரு பசு மனமிரங்கித் தன் மடியிலிருந்து அக் குழந்தையின் வாயில் பாலைச் சுரந்து அதன் பசியை நீக்கியது. இங்ஙனமாக ஏழு நாள் வரையிலும் அந்த ஆவானது அக்குழந்தையை வளர்த்து வந்தது. ஏழாம் நாள் அவ்வழியே வந்த அந்தணன்

ஒருவன் அக்குழந்தையைக் கண்டு எடுத்துச் சென்று ஆசையுடன் வளர்த்து வந்தான்; ஆவினுல் வளர்க் கப்பட்டமையால் அக் குழந்தைக்கு ஆபுத்திரன் என்று பெயரிட்டான். ஆபுத்திரன் இளமையிலேயே கூர்மையான அறிவும் உயர்ந்த ஒழுக்கமும் எல்லா உயிர்களிடமும் அருளும் உடையவனுக விளங்கினுன். அருளே உருவமான புத்தர் போதித்த அகிம்சை நெறி அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. அதனுல் அவன் எந்த உயிர்க்கும் தீங்கு செய்யாமல் மன்னுயிரைத் தன்னுயிர்போல் எண்ணி வாழ்ந்து வந்தான்.

ஒரு சமயம் அவன் வாழ்ந்த ஊரில் உள்ள அந்தணர்கள் ஒன்று சேர்ந்து ஒரு யாகம் செய்ய எண்ணினர். யாகத்தில் பல உயிர்களைப் பலியிடுவது அக்கால வழக்கம். அதன்படியே அவர்களும் ஒரு பசுவைக் கொன்று யாகம் செய்ய முடிவுசெய்தனர். யாகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. யாகம் செய்வதற்கென்று ஒரு நாள் குறிப்பிடப்பட்டது. அருள் உள்ளம் வாய்ந்தவனுன ஆபுத்திரன் அவர்கள் செயலை அறிந்து மனம் துடித்தான் ; அவர்கள் அறியாமையைக் கண்டு வருந்தினுன். எங்ஙனமேனும் யாகத்தில் கொல்ல இருக்கும் பசுவைக் காப்பாற்ற வேண்டும் என்று அவன் முடிவு செய்தான்; அதனுல் யாகம் செய்வதற்கு என்று குறித்த நாளைக்கு முன் நாள் இரவே ஒருவரும் அறியா வண்ணம் யாகப் பசுவை அவிழ்த்து ஓட்டிக்கொண்டு அவ்வூரை விட்டு நெடுந்தூரம் சென்று விட்டான்.

பொழுது விடிந்தவுடன் அந்தணர்கள் யாகப் பசுவைக் காணுமல் தேடினர்; ஆபுத்திரனும் காணப்படாமையால் அவன்தான் பசுவைக் கவர்ந்து சென்றிருக்க வேண்டும் என்று நாற்புறமும் அவனைத் தேடிச் சென்

றனர். அவர்கள் ஆபுத்திரனைக் கண்டு பிடித்து யாகப் பசுவைக் கவர்ந்த கள்வனென்று பழித்து அவனை நையப் புடைத்தனர். அவன் அப்போதும் பொறுமை யாகப் பசுவைக் கொல்வதன் கொடுமையை எடுத்துக் கூறி அச்செயலை விட்டுவிடுமாறு உருக்கமாக வேண் டிக்கொண்டான். அவன் எவ்வளவு கூறியும் பயன் என்ன? அஃது அவர்களுடைய கோபத்தை மேலும் அதிகமாகச் செய்வதற்கே பயன்பட்டது. அதனால் அவர்கள், "பசுவின் மகன் என்பதற்கேற்ற அறிவே உனக்குள்ளது," என்று பழித்து அவனை மேலும் துன் புறுத்தினர். அவர்கள் செய்யும் அநியாயத்தைப் பார்த்துக்கொண்டிருந்த அப் பசு சினங்கொண்டு அவர்களைத் தன் கொம்பால் முட்டித் தள்ளிவிட்டு அருகில் இருந்த ஒரு காட்டில் ஓடி மறைந்துவிட்டது. அது கண்டு ஆபுத்திரன் அகங் குளிர்ந்தான். அந் தணர்களோ ஆத்திரம் கொண்டனர். அதனால் ஆபுத்திரனைக் காத்துவந்த அந்தணன் அவனைத் தன் வீட்டை விட்டே துரத்தி விட்டான்.

இங்ஙனம் துரத்தப்பட்ட ஆபுத்திரன் உணவுக் கும் வழியில்லாமல் அவ்வூரிலேயே பிச்சை எடுக்கத் தொடங்கினான். அவ்வூரில் உள்ளவர்கள் அவன் யாகப் பசுவைக் கவர்ந்த கள்வன் என்று அவனுடைய பிச்சைப் பாத்திரத்தில் உணவுக்குப் பதிலாகக் கல்லும் மண்ணும் இட்டுத் துன்புறுத்தினர். அதனால் உளம் வருந்திய ஆபுத்திரன் அவ்வூரை விட்டு மதுரையை அடைந்தான். மதுரையில் அவன் பிச்சை எடுத்து உண்டு வாழ்ந்து வந்தான். இரவில் அங்கிருந்த கலைமகள் கோயிலில் அவன் படுத்துறங்குவது வழக் கம். கருணை நிரம்பிய மனமுடைய ஆபுத்திரன் தான் பிச்சை எடுக்கும் உணவைக்கொண்டு கண்ணில்

லாதவர், காலில்லாதவர், நோயுற்ருர், பிணி நடுக்குற்ருேர், முதியவர் முதலிய ஏழை மக்களுக்குத் தானம் செய்து அவர்கள் துன்பத்தை நீக்கி வந்தான். என்னே அவன் உயர் குணம்!

ஒரு நாள் இரவு நல்ல மழை பெய்துகொண்டிருந்தது. ஆபுத்திரன் தான் பிச்சை எடுத்துக்கொண்டு வந்த உணவைப் பல ஏழைகட்கும் பகுத்துக்கொடுத்துத் தானும் உண்டு படுத்துறங்கிக்கொண் டிருந்தான். நள்ளிரவில் கை கால் இழந்த முடவரும், கண்ணற்ற குருடரும், காது கேளாத செவிடருமாகிய சிலர் மழையால் நனைந்து குளிரால் நடுங்கி அக் கோயிலை வந்தடைந்தனர். அவர்கள் ஆபுத்திரனை எழுப்பி, ‘‘மிகவும் பசியால் வருந்துகின்ருேம்; ஏதாவது உணவு கிடைக்குமோ?’’ என்று கேட்டனர். அவர்கள் நிலை கண்டு இரங்கிய ஆபுத்திரன் உள்ளம் உருகினுன்; அவர்கள் பசி நோயைத் தீர்க்கும் வழி யறியாது திகைத்தான். அவர்கட்கு இல்லை என்று கூற மனமில்லாத ஆபுத்திரன் அக்கோயிலில் எழுந்தருளியுள்ள சிந்தா தேவியை வணங்கி,

‘‘ சிந்தாதேவி! செழுங்கலை நியமத்து
நந்தா விளக்கே! நாமிசைப் பாவாய்!
வானேர் தலைவி! மண்ணேர் முதல்வி?

இவர்களடைந்த துன்பத்தை நீதான் நீக்கியருள வேண்டும்,’’ என்று முறையிட்டான். அவன் வேண்டுகோளுக்கு மனமிரங்கிய நாமகள் அவனிடம் **அமுத சுரபி** என்ற ஒரு பாத்திரத்தைக் கொடுத்து, ‘‘இப்பாத்திரத்தில் எடுக்க எடுக்கக் குறையாது அமுதம் சுரக்கும்; நாடு வறங் கூரினும் இவ்வோடு வறங் கூராது; இதனைக் கொண்டு அறம் செய்வாயாக,’’ என்று அருள் செய்தனள். ஆபுத்திரன் அடைந்த மகிழ்ச்சிக்கு

அளவு முண்டோ? அன்னையின் கருணையை வாழ்த்தி அவன் அப் பாத்திரத்தைக் கொண்டு பசித்து வந்தவர் கட்கெல்லாம் வயிறுர உணவளித்தான். பசி நீங்கி வயிறு குளிர்ந்த அவர்கள் ஆபுத்திரனை உள்ளங்குளிர வாழ்த்தினர்.



ஆபுத்திரன் அதுமுதல் பிச்சை எடுக்கும் தொழிலை விட்டு விட்டான். அமுத சுரபியின் உதவி யால் அந்நகரில் உள்ள வறியவர்கள் அனைவர்க்கும் உணவளித்தான். அவன் அறச் செயல் எங்கும் பர வியது. அதனுல் பல ஊர்களிலிருந்தும் ஆதரவற்ற வறியவர்கள் யாவரும் திரள் திரளாக வந்து அவனிடம் உணவு பெற்றுண்டு கவலை யறியாது வாழ்ந்து வந்த னர். மக்களே யன்றி விலங்குகள், பறவைகள் முதலிய வற்றையும் ஆபுத்திரன் காத்து வந்தான். அதனுல் எப்பொழுதும் இரவலர் கூட்டம் ஆபுத்திரனைச் சூழ்ந் திருக்கலாயிற்று.

இங்ஙனம் இரவலரைப் போற்றிக் காத்த ஆபுத்திரனின் அறச் செயலை இந்திரன் அறிந்தான். அவன் ஒரு நாள் ஆபுத்திரன் எதிரில் தோன்றி, ''உன் அறச் செயலைக் கண்டு மனம் மிக மகிழ்ந்தேன்; நீ வேண்டிய வரம் கேள்,'' என்று கூறினான். ஆபுத்திரன் நகைத்து, ''இரவலர்க்கு ஈந்து மகிழும் இன்பத்தினும் நான் பெறக்கூடிய பேறு வேறு ஒன்றும் இல்லை; சுவர்க்கலோக இன்பமும் இவ்வின்பத்திற்கு ஈடாகாது. அறம் என்பது பயன் கருதிச் செய்யக்கூடியதன்று. பயன் கருதிச் செய்தால் அஃது அறத்தை விலைக்கு விற்பது போலாகும். ஆகையால் நான் எதனையும் விரும்பவில்லை,'' என்று கூறினான். ஆபுத்திரன் தன்னை இங்ஙனம் அவமதித்ததால் இந்திரன் பெருஞ் சினங்கொண்டான். அதனால் அவன் மேகங்களை ஏவிப் பெரு மழை பொழியச் செய்தான். அதனால் நாடு நகரங்கள் செழித்தன; விளைவு பெருகியது; பஞ்சமும் பசியும் நீங்கின. ஆபுத்திரனிடம் உணவு பெற வரும் இரவலர் தொகை குறையலாயிற்று. நாளடைவில் ஆபுத்திரனிடம் உணவு கேட்பவரே இலராயினர். அதனால் அமுத சுரபி பயனற்றதாயிற்று. அதனைக் கொண்டு அவன் மட்டும் உண்டு வாழ விரும்பாமல் பஞ்சம் நிறைந்துள்ள வேற்றூர்க்குச் செல்ல முடிவு செய்தான்.

அச்சமயத்தில் சாவகத்தீவிலிருந்து வந்த வணிகர்கள் அங்கு மக்கள் உண்ண உணவின்றிப் பெரும் பஞ்சத்தால் வருந்துவதாகக் கூறினர். ஆபுத்திரன் சாவகத்தீவுக்குச் செல்ல விரும்பினான்; அவ்வணிகர்கள் மீண்டும் சாவகத்தீவிற்குச் சென்றபோது தானும் அவர்களுடன் கப்பலில் புறப்பட்டுச் சென்றான். அவன் ஏறிச் சென்ற கப்பல் வழியில் மணிபல்லவத்

தீவில் தங்கியது. அப்போது கப்பலில் இருந்தோர் அனைவரும் அத் தீவின் இயற்கை அழகைக் கண்டு களிக்கவும் சிறிது களைப்பாறவும் அங்குத் தங்கினர். ஆபுத்திரனும் அவர்களுடன் இறங்கினன். அவன் அத் தீவைச் சுற்றிப் பார்த்து மகிழ்ந்தான்; சிறிது நேரம் இளைப்பாறுவதற்காக அங்கிருந்த புன்னை மர நிழலில் அமர்ந்தான். பாவம்! இளைப்பு மிகுதியாலும், நல்ல காற்றாலும் அவன் அங்கேயே அயர்ந்து உறங்கி விட்டான். மற்றையவர்கள் அவன் உறங்குவதைக் கவனிக்கவில்லை. எல்லோரும் கப்பலுக்குச் சென்று விட்டனர். கப்பலும் புறப்பட்டுச் சென்றுவிட்டது. நன்றாக உறங்கி எழுந்த ஆபுத்திரன் கப்பலைக் காணு மல் திடுக்கிட்டான்; என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தான்; கண்ணீர் விட்டழுதான். அவன் வற்று மல் உணவளிக்கும் அமுத சுரபியைக்கொண்டு வேண்டிய உணவைப்பெற்று உண்டு அத்தீவிலேயே வாழ்ந்திருந்து மீண்டும் கப்பல் வரும்போது அதில் ஏறித் தான் விரும்பும் இடம் செல்லலாமன்றோ! ஆனால் ஆபுத்திரன் ஆதரவற்றவர்கட்கு அமுத மளிக்கக் கலை மகளால் வழங்கப்பட்ட அப்பாத்திரத்தைக் கொண்டு தான் மட்டும் உண்டு ஒரு நாள் கூட வாழ விரும்ப வில்லை. ஆகையால் அவன், "நல்ல அறம் செய்யும் குணமுடையவர் யாவராயினும் வருவாராயின் அவர் கையில் சென்று சேர்க," என்று கூறி அப் பாத் திரத்தை அங்கிருந்த கோமுகி என்ற பொய்கையில் வீசி எறிந்துவிட்டான். பாத்திரத்தை இழந்த ஆபுத் திரன் அப் புன்னை மர நிழலிலேயே உண்ணுமல் பட்டினி கிடந்து உயிர் துறந்தான். ஆபுத்திரனின் அருங்குணத்தை என்னென்று புகழ்வது!

இத்தகைய புண்ணிய சீலனாக விளங்கிய ஆபுத்

திரன் தான் செய்த அறத்தின் பயனுக அடுத்த பிறவி யில் புண்ணிய ராசன் என்ற பெயரோடு அரச குடும் பத்தில் பிறந்து பேரும் புகழும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்தான். ஆபுத்திரன் பொய்கையில் எறிந்த அமுத சுரபியே பின்பு மணிமேகலை என்ற அறச் செல்விக் குக் கிடைத்தது. அவள் அதனைக்கொண்டு அளவற்ற அறச்செயல் புரிந்தனள்.

### குறிப்பு

மன்னுயிர் - உலகில் பொருந்திய உயிர்; நியமம் - கோயில்; நந்தா - அணையாத; பாவை - பெண்; வானேர் - தேவர். அமுத சுரபி - எடுக்க எடுக்கக் குறையாது உணவு அளிப்பதாகிய ஒரு பாத்திரம்; வறங்கூரினும் - மிகவும் வறண்டாலும்; உள்ளம் குளிர - மனம் மகிழ; சாவகத்தீவு - தற்போது 'ஜாவா' என வழங்கப்படும் தீவு.

### விளுக்கள்

1. அன்னதானமே எல்லாத் தானங்களினும் சிறந்தது என்பது எவ்வாறு பொருந்தும்?

2. ஆபுத்திரன் யார்? அவன் அப்பெயர் பெறக் காரணம் என்ன?

3. ஆபுத்திரனைக் காத்துவந்த அந்தணன் ஏன் அவனை வீட்டை விட்டுத் துரத்தினுன்?

4. அமுத சுரபியின் சிறப்பு யாது? அதனை ஆபுத்திரன் எங்ஙனம் பெற்ருன்?

5. இந்திரன் ஆபுத்திரனிடம் சினம் கொள்ளக் காரணம் என்ன?

6. ஆபுத்திரன் அமுத சுரபியைக் கோமுகிப் பொய்கையில் எறிந்தது ஏன்?

7. ஆபுத்திரன் அடைந்த புண்ணியப் பயன் யாது?

### மொழிப் பயிற்சி

I. அகராதி பார்த்துப் பொருள் எழுதுக:—உண்டி, அநாதை, ஆத்திரம், இரவலர், புரவலன், பேறு, ஆ.

II. சேர்த்து எழுதுக :—இ + அறம் ; நான்கு + புறம் ; இ + ஒடு ; வயிறு + ஆர ; பெருமை + சினம் ; வேறு + ஊர்.

III. பிரித்து எழுதுக :—மனமிரங்கி, வழியறியாது, அருங் குணம், ஆதரவற்றவர்.

IV. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—அநாதை, நள்ளிரவு, ஆத்திரம் கொண்டான், அகம் குளிர்ந்தான், வயிறார, பேரும் புகழும்.

V. அவர்கள் ஆபுத்திரனைக் கண்டு பிடித்து யாகப் பசுவைக் கவர்ந்த கள்வனென்று பழித்து அவனை நையப் புடைத்தனர்.

இவ்வாக்கியத்தை மூன்று சிறு வாக்கியங்களாகப் பிரித் தெழுதுக.

VI. 'ஆபுத்திரனும் இந்திரனும்' என்பது பற்றிப் பதினைந்து வரிகளில் கட்டுரை எழுதுக.

### இலக்கணப் பயிற்சி

**அரசன் யாகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான்.**

இவ்வாக்கியத்தில் அரசன்—எழுவாய், செய்தான் - பயனிலை, ஏற்பாடுகளை - செயப்படுபொருள். இங்கு யாகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தவன் அரசன். ஆதலின் செய்தான் என்பது செய்வினை யாகும்.

**யாகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் அரசனால் செய் யப்பட்டன.**

முதல் வாக்கியத்தில் உள்ள ஏற்பாடுகளை என்னும் செயப்படு பொருள் இங்கு எழுவாயாக வந்தது. அரசன் என்னும் எழுவாய் மூன்றாம் வேற்றுமையை ஏற்று வந்தது. செய்தான் என்னும் வினை ஏற்பாடுகள் என்ற எழுவாய்க்கு ஏற்றவாறு பன்மையாக, செய்யப்பட்டன என வந்தது. இவ்வாறு எழுவாய் செய்யும் தொழிலைச் செயப்படு பொருள் மேல் ஏற்றிச் செயப்படு பொருளை எழுவாயாக்கிக் கூறும் வினை **செயப்பாட்டு வினையாம்.**

கீழ்க்கண்ட வாக்கியங்களில் உள்ள செய்வினைகளைச் செயப் பாட்டு வினைகள் ஆக மாற்றி எழுதுக:—

1. ஆபுத்திரன் வறியவர்களுக்கு உணவளித்தான்.
2. ஆபுத்திரனின் அறச் செயலை இந்திரன் அறிந்தான்.
3. சிந்தாதேவி ஆபுத்திரனுக்கு அமுத சுரபியை வழங் கினாள்.

## 6. நோய்க்கு இடங்கொடேல்

'சுவரை வைத்துக் கொண்டே சித்திரம் எழுதல் வேண்டும்' என்பது நம் நாட்டில் வழங்கும் பழமொழி யாகும். அதுபோல நம் உடலை உறுதியாக வைத்துக் கொண்டால்தான் எந்த நல்ல செயலையும் செய்ய முடியும். கல்வி கற்கும் மாணவர் உடலுரமுடையவர் களாயிருந்தால் சீரிய முறையில் கல்வி கற்க முடியும். உடல் நலக் குறைவால் எத்தனையோ சிறுவர்களுடைய கல்வி தடைப்பட்டுள்ளது. செல்வமுடையவனும் உடல் நலமுடையவனுயிருந்தால்தான் அச் செல் வத்தைக் கொண்டு இன்பமாக வாழ முடியும்; அதனை அழியாமல் காக்கவும் முடியும். கையில் பொருளில்லா விட்டாலும் நல்ல உடல் நலத்துடன் நோயில்லாமல் வாழ்பவனுடைய வாழ்க்கையே இன்பமான வாழ்க்கை யாகும். செல்வத்தைக் காட்டிலும் நோயற்ற நல் லுடலே ஒருவனுக்குச் சிறந்த செல்வமாம். இது பற்றியே 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்று நம் முன்னோர் கூறினர்.

ஒருவன் நோயற்ற வாழ்வை எங்ஙனம் அடைதல் கூடும்? நோய்கள் தன்னை அணுகாதவாறு ஒருவன் எச்சரிக்கையுடன் நடந்து கொண்டால் நோயின்றி வாழ முடியும். நோய்களுக்குச் சிறிது இடங் கொடுத் தாலும் அவை நமக்குத் தெரியாமலேயே மெல்ல மெல்ல வளர்ந்து பெருகி நம்மை அழித்து விடும். நோய் பகைவரினும் கொடியதாகும். பகைவர்கள் வெளியே இருந்து ஒருவரை அழிக்க முயல்வர். ஆதலால் அவர்களிடம் எச்சரிக்கையாக இருந்தால் அவர்களை வென்று விடலாம். ஆனல் நோயோ உடன் பிறந்தே கொல்லக் கூடியதாகும். நமக்குத்

தெரியாமலேயே வளர்ந்து அது நம்மை அழித்து விடும். ஆதலால் மிகவும் எச்சரிக்கையாக இருந்தால் தான் நோயினின்றும் நம்மைக் காத்துக் கொள்ள முடியும். ஆகவே நோயின்றி வாழும் சிறந்த முறைகளை ஒவ்வொருவரும் அறிந்திருக்க வேண்டியது மிகவும் இன்றியமையாததாகும்.

நோயற்ற வாழ்க்கைக்குத் தூய்மையே முதற்படியாம். நம் உடல், உடை, வசிக்கும் இடம், சுற்றுப்புறம் ஆகியன யாவும் தூய்மையுடையனவாக இருக்குமாறு நாம் கவனித்துக்கொள்ள வேண்டும். நாள்தோறும் நீராடுதலும், அழுக்கில்லாத தூய ஆடையை அணிதலும் நல்ல பழக்கங்களாம். ‘கூழானாலும் குளித்துக் குடி; கந்தையானாலும் கசக்கி கட்டு’ என்ற முதுமொழி இவற்றின் அவசியத்தை விளக்கவே உண்டானதாகும். நாம் வசிக்கும் வீடு சிறியதாயினும் நல்ல காற்றும் வெளிச்சமும் உட்புகக் கூடிய வீடாய் இருத்தல் வேண்டும். ‘வெளிச்சம் புகாத வீட்டில் வைத்தியன் புகுவான்’ என்பது பழமொழி. வீடுகளில் உள்ள பொருள்கள் ஒழுங்காக இருக்க வேண்டும். கண்ட இடங்களில் எல்லாம் பொருள்கள் சிதறிக் கிடப்பதும், குப்பை கூளங்களை மூலைகளில் ஒதுக்கி வைப்பதும் நோய்க்குக் காரணங்களாகும். நாம் வசிக்கும் இடமும் தெருவும் சுகாதார வசதியுடையனவாக இருக்குமாறு கவனித்துக் கொள்ளுதல் நன்மை தரும். சுற்றுப்புறங்கள் அசுத்தமாக இருப்பதே தொற்று நோய்கள் பரவுவதற்குக் காரணமாம்.

மற்றும் நாம் உண்ணும் உணவு, பருகும் நீர், உட்கொள்ளும் காற்று இவைகளிலும் கவனம் செலுத்துதல் இன்றியமையாததாகும். நாம் உட்கொள்ளும் உணவு நம் உடல் நிலைக்கும், நாம் செய்யும் தொழி

லுக்கும், கால நிலைக்கும், வயதுக்கும் ஏற்ற வண்ணம் இருத்தல் வேண்டும். கடினமான உடல் உழைப்புள்ள வர்கள் நல்ல கொழுப்பான உணவை உட்கொள்ள லாம். அவர்கள் உழைப்பினால் அவ்வுணவு எளிதில் ஜீரணமாகி விடும். ஆனால் அதே உணவை உடல் உழைப்பில்லாதவர்கள் உண்ணலாமோ? உண்டால் அவர்கள் ஜீரண உறுப்புக்கள் நோயுற்று அஜீரணம், மலச்சிக்கல் போன்ற பல நோய்களால் மிக வருந்து வர். 'மலச்சிக்கலே நோய்களுக்கெல்லாம் தாய்' என்று கூறுவர். அங்ஙனமே கோடைக்காலத்துக்கு ஏற்ற உணவை மழைக் காலத்தில் உண்பது ஏற்ற தன்று. இளைஞர்கட் குரிய உணவை முதியவர் உண் பதும் பொருந்தாது. ஆதலால் நமக்குப் பொருந்திய உணவைத் திருந்த உண்ணுதல் அவசியமாகும். எவ்வளவு சிறந்த உணவாயிருந்தாலும் அளவுக்கு மீறி உண்ணுதல் கூடாது. 'அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சாகும்'.

நன்கு பசித்த பின்னரே உண்ணுதல் வேண்டும். பசியில்லாத போதெல்லாம் உண்பதும், கண்ட உண வுப் பொருள்களையெல்லாம் கண்ட நேரத்தில் உண் பதும் மிகவும் தீய பழக்கங்களாம். பசித்துப் புசித் தலின் அவசியத்தை,

'மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி யுணின்'.

என்று வள்ளுவர் அழகாகக் கூறியுள்ளார். உண்ட வுணவு நன்கு ஜீரணித்துப் பசி எடுப்பதை அறிந்து உண்பவனின் உடம்புக்கு மருந்தே வேண்டியதில்லை என்பது இப்பாட்டின் கருத்து. 'அற்றால் அளவறிந் துண்க', என்றும் அளவுக்கு அதிகமாக உண்ணுதல் கூடாது என்பதனை அவர் வற்புறுத்திக் கூறியுள்ளார்.

உணவு உண்ணும் போதும் நாம் சில நற்பழக்கங்களை மேற்கொள்ளல் வேண்டும். உணவு உட்கொள்வதற்கு முன் கை கால்களைத் தூய்மை செய்து கொள்ளுதல் வேண்டும். வாய், பல் முதலியவற்றையும் தூய்மை செய்து கொள்ளுதல் மிகவும் அவசியமாம். பின்னர் நன்கு அமர்ந்து பொறுமையாக உணவை மென்று உண்ண வேண்டும். மென்று தின்ருல் நாம் உண்ணும் உணவு உமிழ் நீரோடு நன்கு கலந்து ஜீரணமாவதற்கு ஏற்றதாக மாறும். எனவே உண்ணும்போது உணவிலேயே கவனம் செலுத்தி மெதுவாக உண்ணுதல் வேண்டும். இக்காரணம் பற்றியே உண்ணும்போது மௌனமாயிருத்தல் வேண்டும் என நம் முன்னேர்கள் கூறியுள்ளனர். சாப்பிடுகையில் கோபம் முதலிய உணர்ச்சிகள் தோன்றிஞல் ஜீரண நீர்கள் தக்கவாறு சுரக்க மாட்டா. நாம் உண்ணும் உணவு நம் உடலுக்கு வேண்டிய பல விதமான சத்துக்களும் கலந்த உணவாக இருத்தல் வேண்டும். உண்ட பிறகும் கை, வாய் முதலியவற்றைத் தூய்மை செய்து கொள்ளல் அவசியம். இல்லையாஞல் நாம் உண்ட உணவின் துணுக்குகள் பல்லின் இடை வெளிக்குள் தங்கிப் பற்பல நோய்களை உண்டாக்கும். பற்களில் உள்ள அழுக்கும் ஊத்தையும் எத்தனையோ நோய்களுக்குக் கரணங்களாகும் என்று மருத்துவர்கள் கூறுகின்றனர். ஆதலால் காலை மாலை இரண்டு வேளையும் பல் துலக்குதல் நல்ல பழக்கமாம். பல் துலக்குவதற்கு ஆலங்குச்சியும் வேலங் குச்சியும் மிகச் சிறந்தனவாகும். ' ஆலும் வேலும் பல்லுக் குறுதி ' என்பது நம் முன்னேர் கள் அறிந்த உண்மையாகும்.

நம் கண்ணுக்குத் தெரியாத நுண்ணுயிர்களே

தொற்று நோய்களுக்குக் காரணமானவை என்று அறிஞர்கள் கண்டறிந்துள்ளனர். அவ்வணுக்கள் நம் கண்களுக்குத் தெரியா; பூதக் கண்ணுடியால் நோக்கினுல் தெரியும். அவை பருகும் நீரின் மூலமாகவும், சுவாசிக்கும் காற்றின் மூலமாகவும் ஒருவர் உடலில் சென்று நோயை உண்டாக்குகின்றன. ஆதலின் நாம் உட்கொள்ளும் நீரும் காற்றும் தூய்மையானவையாய் இருப்பின் தொற்று நோய்கள் வராமல் பெரும்பாலும் தடுத்துக் கொள்ளலாம். ஆதலின் தண்ணீரைக் கொதிக்க வைத்துப் பருகுவதும், உணவைச் சூடாக உண்பதும் மிகவும் இன்றியமையாதனவாகும். 'தாயைப் பழித்தாலும் தண்ணீரைப் பழிக்கலாகாது' என்று சிலர் எவ்வளவு அசுத்தமான தண்ணீராயிருந்தாலும் குளிக்கவும் குடிக்கவும் பயன்படுத்துகின்றனர். இஃது எவ்வளவு அறியாமை என்று சிந்துத்துப் பாருங்கள்.

நோயற்ற வாழ்வைப் பெறுவதற்கு உடற் பயிற்சி மிக அவசியமாகும். காலையிலும் மாலையிலும் உடற் பயிற்சி செய்தல் வேண்டும். இளைஞர்கள் தங்களுடைய கை, கால், வயிறு முதலான எல்லா உறுப்புகளுக்கும் வலிமை தரக்கூடிய கால்பந்து, சடுகுடு, ஓடிப்பிடித்தல், தாண்டுதல், உயரத்தாண்டுதல், ஓடுதல் போன்ற உடற் பயிற்சிகளைச் செய்தல் வேண்டும். வாலிபர்கள் தண்டால், பஸ்கி, கரளா சுற்றுதல், பலவித ஆசனப் பயிற்சிகள் செய்தல் முதலிய பழக்கங்களை மேற்கொள்ளலாம். முதியவர்கள் இத்தகைய பயிற்சிகளைச் செய்ய இயலாதாயின் காலையிலும் மாலையிலும் உலவும் பயிற்சியை மேற்கொள்ளலாம். ஏற்ற மிறைத்தல், பரம்படித்தல், இரும்படித்தல், மரம் வெட்டல், மூட்டை தூக்கல் போன்ற கடினமான

உடலுழைப்பை மேற்கொண்டவர்களுக்கும் வீடுகளில் பலவிதமான தொழில்களையும் உடல் வருந்திச் செய்யும் பெண்களுக்கும் அவர்கள் செய்யும் வேலைகளே தக்க உடற்பயிற்சியாய் அமைதலின் அவர்கட்கு வேறு உடற் பயிற்சி அவசியமில்லை. எந்த வகையாலாவது உடலுக்குப் பயிற்சி வேண்டும். சும்மா இருக்கும் இயந்திரம் நாளடைவில் துருப்பிடித்துப் பாழாவது போலப் பயிற்சியற்ற உடம்பு பலவித நோய்களால் உறுப்புக்களழியப் பெற்றுப் பாழாகும்.

உழைத்த உடலுக்கு ஓய்வு அவசியம். இறைவன் ஓய்வுக்காக இரவை அளித்துள்ளார். அதனை வீணுக்கக் கூடாது. இரவில் கண் விழித்தல் மிக்க தீமை தரும். இளைஞர்கள் குறைந்தது எட்டு மணியும் முதியவர்கள் குறைந்தது ஆறு மணியும் உறங்குதல் மிகவும் அவசியமாம்.

இவை எல்லாவற்றிற்கும் மேலாக நல்ல எண்ணம் அவசியமாக வேண்டிய தொன்றுகும். தீய எண்ணங்கள் நம் இரத்தத்தைக் கெடுத்து நம் உடலுக்குப் பல வித நோயை உண்டாக்கும். சினமும் பொறுமையும் உடையவர்கள் அவற்றுல் மன நோய், இருதய நோய், மூளை நோய் முதலிய தீராத நோய்களால் வருந்துதல் கண்கூடு. பொறுமையால் பைத்தியம் பிடிக்கப் பெற்றவர்கள் பலராவர். ஆகவே இளமையிலிருந்தே தீய எண்ணங்களை விலக்கி நல்ல எண்ணங்களையே நினைக்கப் பழகுதல் வேண்டும். நல்லெண்ணங்களை நினைத்துப் பழகுவதற்குக் கடவுள் பக்தி மிகவும் துணை செய்யும்.

இவ்வளவு எல்லாம் கவனித்து வாழ்ந்தாலும் சில சமயங்களில் நாம் நோய்வாய்ப்பட நேருகிறது. அதற்குக் காரணங்கள் பல உள்ளன. அச்சமயங்

களில் நாம் மருத்துவர் உதவியை நாடி நோயைத் தீர்த்துக் கொள்ளுதல் இன்றியமையாத தாகும். தொற்று நோய் பரவியுள்ள காலங்களில் அவற்றைத் தடுக்க அம்மை குத்திக்கொள்ளுதல், ஊசி குத்திக் கொள்ளுதல் போன்ற தடுப்பு முறைகளை மேற்கொள் ளுதலும் இன்றியமையாததேயாகும். நோய்க்கு மருந்து உண்பதை நம் பழக்கங்களில் ஒன்ருகக் கொள் ளாமல் கூடிய வரையில் மருந்தை விலக்கி இயற்கை முறையில் நோயை நீக்கிக் கொள்ள முயல்வதே அறிவுடைமை யாகும்.

மேலே கூறப்பட்ட நற்பழக்கங்களை அறிந்து பின் பற்றிஞல் நாம் நோயின்றி நீண்ட நாள் வாழலாம். குழந்தைகளே! நீங்கள் இளமையிலேயே இத்தகைய நற்பழக்கங்களை அறிந்து பின்பற்றிஞல் அவை உங்கள் வாழ்வில் பிரிக்க முடியாதபடி பழகி விடும். அதஞல் உங்கட்கு உண்டாகும் நன்மைகளுக்கு அள வும் உண்டோ? ஆதலால் நீங்கள் வந்தபின் காப்ப வராக வாழ்வதை விட வருமுன் காப்பவராக வாழ விரும்புவீர்களாக.



### குறிப்பு

தொற்று நோய் - நோய் உள்ளவர்களிடமிருந்து நோயற்றவர் களுக்குப் பரவும் நோய்; எச்சரிக்கை - முன்னேற்பாடு; பூதக் கண்ணுடி - சிறிய பொருள்களைப் பெரியனவாகக் காட்டும் கண் ணுடி; கண்கூடு - கண்ணிற்கு எதிரே காண்பது போன்றது, வெளிப்படை; நோய்வாய்ப்பட - பிணியால் வருந்த.

### விஞக்கள்

1. 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' இப் பழ மொழியின் பொருளை விளக்குக.

2. நோய் எங்ஙனம் பகைவரினும் கொடியது?



3. நோயற்ற வாழ்க்கைக்குத் தூய்மையை முதற் படியாக எங்ஙனம் கூறலாம்?

4. நாம் உண்ணும் உணவு எவற்றிற் கேற்ப மாறுபடும்? உதாரணங்கள் தருக.

5. எத்தகையவர்க்கு மருந்து வேண்டியதில்லை?

6. உண்ணும்போது நாம் கடைப்பிடிக்க வேண்டிய நற் பழக்கங்கள் எவை?

7. நுண்ணுயிர்கள் எங்ஙனம் பரவுகின்றன.

8. உடற் பயிற்சியின் வகைகள் எவை?

9. தீய எண்ணங்கள் எங்ஙனம் நோய்க்குக் காரணமாகும்?

## மொழிப் பயிற்சி

I. அகராதி பார்த்துப் பொருள் அறிக:—உரம், தூய, கடினம், நஞ்சு, யாக்கை, மௌனம்.

II. பிரித்தெழுதுக:—நுண்ணுயிர், பயிற்சியற்ற, பாழாகும், நல்லெண்ணம், உடலுரம்.

III. இப்பாடத்தில் வந்துள்ள பழமொழிகளைத் தொகுத்து எழுதுக. நோயற்ற வாழ்வைப் பற்றிய வேறிரண்டு பழமொழிகளைக் குறிப்பிடுக.

IV. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—

அணுகாதவாறு, எச்சரிக்கையாக, முதுமொழி, வற்புறுத்து, கண்கூடு, தடுப்பு முறைகள்.

V. உடற்பயிற்சி என்பது பற்றி ஒரு கட்டுரை வரைக.

## இலக்கணப் பயிற்சி

நடந்தனன் - இச்சொல்லைப் பல பிரிவுகளாக்கலாம். அப்பிரிவுகளுக்கு உறுப்புக்கள் என்று பெயர். இச்சொல்லின் முதல் உறுப்பு நட என்பது. இதை வேறு பகுதிகளாகப் பிரித்தால் பொருள் தராது. இதற்குப் பகுதி என்று பெயர். வினைச் சொல்லின் பகுதி கட்டளை இடும் சொல்லாகவே இருக்கும்.

இச்சொல்லின் இறுதியில் உள்ள பிரிவு 'அன்' என்பதாகும். இதற்கு விகுதி என்று பெயர்.

நட + த் (ந்) + த் + அன் + அன்

இடையிலுள்ள 'த்' என்பது இடைநிலையாம். இஃது இறந்த காலத்தைக் குறிக்கிறது.

பகுதிக்கும் இடைநிலைக்கும் நடுவில் உள்ள 'த்' என்னும் எழுத்து சந்தி எனப்படும்.

இடை நிலைக்கும் விகுதிக்கும் இடையிலுள்ள 'அன்' என்பது சாரியை எனப்படும்.

சந்தி எழுத்தாகிய 'த்' என்பது 'ந்' ஆக மாறியது விகாரம் எனப்படும்.

எனவே பகுதி, விகுதி, இடைநிலை, சந்தி, சாரியை, விகாரம் என்பன பகுபத உறுப்புக்களாம்.

1. கீழே தரப்பட்டுள்ள வினைகளின் பகுதி, விகுதி, இடைநிலைகளை அறிக:—

| சொல் | பகுதி | இடைநிலை | விகுதி |
|---|---|---|---|
| உண்டான் | உண் | ட் | ஆன் |
| ஓடினாள் | ஓடு | இன் | ஆள் |
| செய்கிறார் | செய் | கிறு | ஆர் |
| காண்போம் | காண் | ப் | ஓம் |
| தேர்வாய் | தேர் | வ் | ஆய் |
| நெய்தீர் | நெய் | த் | ஈர் |
| கற்றேன் | கல் | ற் | ஏன் |
| வருகின்றது | வா | கின்று | து |

2. மேற்கூறிய வினை ஒவ்வொன்றின் திணை, பால், எண் இடம் காலங்களைக் கூறுக.

# 7. கிருஷ்ணராஜ சாகரம்

ஒரு நாடு உலகில் நாகரிகம் பெற்ற நாடாக விளங்குவதற்கு அந்நாட்டின் செல்வநிலையே காரண மாகும். செல்வச் செழிப்பு அந்நாட்டின் விளை பொருள்களாலேயே ஏற்படுகின்றது. உழவுத் தொழில் வளம்பெற ஆறுகள் பெரிதும் உதவி செய் கின்றன. ஆறுகளின் குறுக்கே பெரிய நீர்த்தேக்கங் களும் அணைகளும் அமைக்கப்பட்டுள்ளன. அவற் றின் உதவியால் உழவுத் தொழிலுக்குரிய நீர் வசதி எப்பொழுதும் கிடைக்குமாறு செய்யப்பட்டுள்ளது. அமெரிக்காவில் உள்ள போல்டர் அணைக்கட்டும், நைல் நதியின் குறுக்கே உள்ள சென்னூர் அணைக் கட்டும், சிந்து நதியின் குறுக்கே அமைந்துள்ள சுக்கூர் அணைக்கட்டும் உலகப் புகழ்பெற்றவை யாகும். இவ்வணைகளால் அந்நாடுகளின் செல்வ நிலை பெரிதும் உயர்வடைந்துள்ளது.

நம் தென்னாட்டில் காவிரிநதியின் குறுக்கே இரண்டு பெரிய நீர்த்தேக்கங்கள் அமைந்துள்ளன. ஒன்று சேலம் மாவட்டத்தில் உள்ள மேட்டூர் நீர்த் தேக்கமாகும். மற்றொன்று மைசூர் நாட்டில் உள்ள கிருஷ்ணராஜ சாகரம் என்பதாகும். மேட்டூர் அணையால் சோழநாடு மிக்க வளம்பெறுகிறது. அது போலவே கிருஷ்ணராஜ சாகரத்தால் மைசூர் நாடு பெருவளம் பெற்றுள்ளது.

இந் நீர்த்தேக்கம் மைசூருக்கு வடமேற்கில் பன்னிரண்டு கல் தொலைவில் உள்ளது. அங்குக் காவிரி நதி பாய்ந்தோடுகின்றது. அதற்குச் சற்று மேற்கில் காவிரிநதியுடன் ஹேமாவதி, இலட்சுமண தீர்த்தம் என்னும் இரண்டாறுகள் கலக்கின்றன.

அதனுல் அவ்விடத்தில் காவிரிநதி மிக்க நீர்ப்பெருக் குடையதாய்க் காண்பதற்குக் கடல்போல் காட்சியளிக் கிறது. இத்தகைய இயற்கை நலம் வாய்ந்த இடத்தி லேயே கிருஷ்ணராஜ சாகரம் என்ற நீர்த்தேக்கம் அமைக்கப்பட்டுள்ளது.

திப்பு சுல்தான் என்ற அரசன் மைசூரை ஆண்ட போதே இவ்விடத்தில் அணை கட்ட முயற்சி செய்யப் பட்டது. இப்போதுள்ள அணையைக் கட்டத் தொடங்கும்போது பூமியிலிருந்து ஒரு கல் வெட்டு கிடைத்தது. அதன் மூலம் இச்செய்தி நமக்குத் தெரிகின்றது. என்ன காரணத்தாலோ திப்பு சுல்தான் முயற்சி வெற்றி பெறவில்லை. இப்போதுள்ள இவ் வணை காலஞ்சென்ற மைசூர் மன்னர் கிருஷ்ண ராஜேந்திர உடையார் காலத்தில் தொடங்கப் பெற்றுப் பதினறு ஆண்டுகளில் கட்டி முடிக்கப்பெற்றது. இவ்வணை கட்டிமுடிக்க 250 இலட்சம் ரூபாய் செல வாயிற்று என்று கணக்கிட்டுள்ளனர். இவ்வணை கட்டுவதற்கு மூலகாரணமாக இருந்த அரசரின் பெய ராலேயே இதற்குக் கிருஷ்ணராஜ சாகரம் என்று பெயர் வழங்கினர். சாகரம் என்பதற்குக் கடல் என்பது பொருள். இங்குக் கடல்போல் காட்சியளிக்கும் காவிரியின் நீர்ப் பெருக்கிற்கு அப்பெயரிட்டது சாலப் பொருத்தமல்லவா! இப்பெரிய நீர்த்தேக்கத்தை ஏற் படுத்துவதற்குக் கட்டியுள்ள அணைக்குக் **கண்ணம் பாடி அணை** என்று பெயர் வழங்குகிறது.

இந்த அணை 8600 அடி நீளமும் 130 அடி உயர மும் உடையது. இது முழுவதும் கற்களாலும் சிமெண்டினுலுமே கட்டப்பட்டதாகும். இவ்வணையின் மீது வண்டிகளும் மக்களும் செல்லுமாறு ஒரு சாலை உள்ளது. சாலையின் இருபுறமும் கைப்பிடிச் சுவர்

கள் கட்டப்பட்டுள்ளன. மின்சார விளக்குகள் வரிசையாக அமைக்கப்பட்டுள்ளன. சாலையின் தொடக்கத்திலும் முடிவிலும் அழகான இரண்டு வாயில்கள் உள்ளன. இரவில் மின்சார விளக்கொளி யில் அந்த அணை வழங்கும் காட்சி கண்டவர்களைப் பரவசப்படுத்தும்.



இவ்வணையின் உதவியால் 50 சதுர மைல் பரப் புடைய நீர்த்தேக்கம் ஏற்பட்டுள்ளது. சுமார் ஐந்தா யிரம் கோடி கன அடி நீர் தேங்க இவ்வணையில் வசதி யுள்ளது. வேண்டியபோது தண்ணீரை விடுவதற்கும், வேண்டாதபோது தேக்கி வைப்பதற்கும் உதவியாகப் பெரிய கண்வாய்களை அமைத்து அவற்றை இரும்புக் கதவுகளால் மூடியுள்ளனர். அக்கதவுகள் மின்சாரத் தால் இயங்கக்கூடியனவாகும். இக்கண்வாய்களின் வழியாகப் பேரிரைச்சலுடன் ஓடிவரும் காவிரி

வெள்ளம் கண்டு களிக்கக்கூடிய காட்சியாகும். ஓடிவரும் வேகத்தால் தண்ணீர் நாற்புறமும் சிதறிக் குளிர்ந்த நீர்த் திவலைகளைத் தூவுகின்றது. அஃது அழகிய புகைமண்டலம் போல் காட்சியளிக்கிறது.

அணையின் முன்புறத்தில் காவிரி அன்னையின் சிலை ஒன்று உள்ளது. காவிரித்தாய் தன் நீரை வாரி வழங்குவதுபோல இச்சிலை செதுக்கப்பட்டுள்ளது. அதன் கைகளிலிருந்து நீர் பெருகிக்கொண்டே இருக்கின்றது. அணையின் பின்புறத்தில் உள்ள நீர் அணையை ஊடுருவிக் கொண்டு அச்சிலையின் கைகளில் வழிகின்றது. அக்காட்சி பார்ப்பவர்க்கு வியப்பையும் மகிழ்ச்சியையும் அளிக்கக் கூடிய தாகும். அங்ஙனம் அச்சிலையை அமைத்த சிற்பியின் ஆற்றல் போற்றற்குரியதன்றோ ?

கிருஷ்ணராஜ சாகரத்திற்கு முன்புறத்தில் 'பிருந்தாவனம்' என்ற அழகிய பூஞ்சோலை ஒன்றை அமைத்துள்ளனர். இத்தோட்டம் மேட்டிலிருந்து படிப்படியாகத் தாழ்ந்து செல்கிறது. அது பார்ப்பதற்குப் பல அடுக்குகளாகக் காட்சியளிக்கின்றது. அணையிலிருந்து பெருகும் நீரைக்கொண்டு மின்சாரத்தின் உதவியால் அத்தோட்டத்தை இயற்கை யழகும் செயற்கை நலமும் வாய்ந்த அழகுக் கோயிலாகச் செய்துள்ளனர். அத்தோட்டம் மாலைக்காலத்தில் சென்று களித்தற்குரியதாகும். இரவில் பலநிற மின்சார விளக்குகளால் அதன் வாயில் அலங்கரிக்கப்பட்டுப் பேரழகுடன் விளங்குகின்றது. வாயிலைக் கடந்து சென்றவுடன் சுமார் ஆறு அடி அகலத்தில் காவிரி நீர் பெருகி ஓடுகிறது. அதன் இருமருங்கும் கைப்பிடிச் சுவர் அமைத்துள்ளனர். கைப்பிடிச் சுவர்களுக்குப் பக்கத்தில் இருபுறங்களிலும் மக்கள்

நடந்து செல்வதற்கேற்ற நடைபாதைகள் அமைக்கப் பட்டுள்ளன.

இடையில் உள்ள படிகளின் வழியே மேட்டி லிருந்து அடுக்கடுக்காகத் தவழ்ந்துவரும் நீரோட்டத்



தைப் பலவித மின்சார விளக்குகளால் அலங்கரித் துள்ளனர். ஒவ்வொரு படியின் இறக்கத்திலும் பச்சை, சிவப்பு, நீலம் என்பன போன்ற பலநிற மின்சார விளக்குகளே அமைத்து அவற்றின் ஒளி பெருகிவரும் நீரின் மீது படுமாறு செய்துள்ளனர். அதனுல் நீர் ஓரிடத்தில் குங்குமத்தைக் கரைத்து ஊற்றினுற்போலவும், மற்ருேரிடத்தில் பச்சை மரகத மணியைப் பொடி செய்து பரப்பினுற்போலவும், வேருேரிடத்தில் நீல நிற வானமே படிந்திருப்பது போலவும் அழகாகக் காட்சியளிக்கிறது. இங்ஙனம் பல நிறங்களுடன் படிப்படியாக ஓடிவரும் இவ்

வழகிய நீரோட்டத்தைக் கீழ்ப்படியிலிருந்து காண்பவர் அவ்வின்பக் காட்சியைக் கண்டு மெய்ம் மறந்து நிற்பர். நடைபாதையில் இருபுறத்திலும் செடிகளை வளர்த்துக் கத்தரித்துத் திண்ணைகளைப் போல் அமைத்துள்ளனர். அவை விளக்கொளியில் மரகதத்தால் அமைக்கப்பட்ட திண்ணைகளைப்போல விளங்குகின்றன. மற்றும் அத்தோட்டம் முழுவதும் பல நீரூற்றுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. மின்சார விளக்கின் உதவியால் அவை புரியும் இந்திரஜாலங்கள் சொல்லிலடங்காதனவாகும். விநாடிக்கு விநாடி பல வேறு நிறங்களாய் மாறி மாறி நீர்த்துளிகளை நாற் புறமும் சிதறும் அவ்வூற்றுக்கள் பலநிற மணிகளை வாரி வாரி இறைப்பதுபோல் தோன்றுகின்றன. இவ் வாறு பேரழகுவாய்ந்த பிருந்தாவனம் காண்பவர் கவலையை மறக்கச் செய்து இன்பப்பொழுது போக்குக் கேற்றதாக விளங்குகின்றது.

இந்த அணையின் உதவியால் மைசூர் நாடு பெரும் பயன் பெற்றுள்ளது. மைசூர் நாட்டில் மட்டும் காவிரிக்குப் பன்னிரண்டு அணைகள் உள்ளன. அவற்றில் கண்ணம்பாடி அணையே மிகப் பெரிய தாகும். இவ்வணை கட்டப்பட்டதனுல் மலைநாடாகிய மைசூர் நாடு உழவுத் தொழில் செய்வதற்கேற்ற வசதி பெற்றது. இவ்வணையிலிருந்து ஒரு கால்வாய் அமைத்து நீர்வசதி இல்லாத இடங்களுக்கு நீர்ப் பாசன வசதி செய்துள்ளனர். அக்கால்வாய் இர்வின் **கால்வாய்** என்று வழங்கப்படுகிறது. இங்ஙனம் நீர் வளம் செழித்த காரணத்தால் மைசூர் நாட்டில் 1,25,000 ஏக்கர் நிலங்களில் நெல் முதலிய தானியங் களும் 40,000 ஏக்கர் நிலங்களில் சிறந்த கரும்பும் பயிர் செய்யப்படுகின்றன. இதன் உதவியால் சிவ

2397—5

சமுத்திர நீர்வீழ்ச்சிக்கு எப்போதும் தண்ணீர் கிடைக்கின்றது. அதனால் அங்கு ஏராளமாக மின் சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. அம்மின்சார உதவியைக் கொண்டு பலவகையான தொழில்கள் நடைபெறுகின்றன. அவற்றில் மாண்டியாவில் நடைபெறும் சர்க்கரைத் தொழிற்சாலையும், பத்திரா வதியில் நடைபெறும் இரும்புத் தொழிற்சாலையும், கோலாரில் உள்ள தங்கச் சுரங்கமும் குறிப்பிடத் தக்கனவாம். காவிரிக்குப் 'பொன்னி' என்று ஒரு பெயர் உண்டு. அப்பெயருக்கு ஏற்ப அந்நதியின் உதவியால் பூமியிலிருந்து பொன் எடுக்கப்படுவது குறிப்பிடத்தக்கதன்றோ? மற்றும் பட்டு நெசவுத் தொழிற்சாலை, காகிதத் தொழிற்சாலை போன்ற எண் ணற்ற தொழில்கள் நடப்பதால் மைசூர் நாடு செல்வம் சிறந்த நாகரிக நாடாகத் திகழ்கின்றது.

இதுவரை கூறியவற்றால் மைசூர் நாட்டிற்குச் செல்வோர் கண்டுகளிக்கத்தக்க காட்சிகளில் கிருஷ்ண ராஜ சாகரமும் பிருந்தாவனமும் முக்கியமானவை என்பது நன்கு விளங்குமன்றோ?

### குறிப்பு

நீர்த் தேக்கம் - ஆற்று நீரைத் தேக்கும்பொருட்டு ஆறு களின் குறுக்கே அணைகட்டுவதால் ஏற்படும் பரந்த நீர்ப்பரப்பு; சதுரமைல் - ஒரு மைல் நீளம் ஒரு மைல் அகலமுள்ள பரப்பளவு; கன அடி - முறையே ஓர் அடி நீளம் அகலம் உயரம் கொண்ட அளவு; கண்வாய் - அணையிலிருந்து தண்ணீர் பாய்வதற்காக ஏற்படுத்தப்பட்ட வழி; மரகதம் - பச்சை நிற மணி; இந்திர ஜாலம் - மாயவித்தை.

### வினாக்கள்

1. உலகில் புகழ்பெற்ற அணைக்கட்டுகள் மூன்றின் பெய ரைக் குறிக்க.

2. காவிரியின் குறுக்கே அமைந்த இரண்டு நீர்த்தேக்கங்கள் எவை? அவற்ருல் வளம்பெற்ற நாடுகள் யாவை?

3. கிருஷ்ணராஜசாகரம் எங்கு அமைக்கப்பட்டுள்ளது? அஃது அப்பெயர் பெற்ற காரணம் என்ன?

4. கிருஷ்ணராஜசாகர நீர்த்தேக்கத்தின் அமைப்பை விவரிக்க.

5. காவிரி அன்னையின் சிலை அமைப்பைப் பற்றி ஒரு குறிப்பு எழுதுக.

6. பிருந்தாவனக் காட்சி எத்தகையது?

7. கிருஷ்ணராஜசாகரத்தினுல் ஏற்பட்ட பயன்களைத் தொகுத்து வரைக.

## மொழிப் பயிற்சி

I. அகராதி பார்த்துப் பொருள் அறிக :—தொலைவு, சிலை, வியப்பு.

II. பிரித்தெழுதுக :—வடமேற்கு, பதினுறு, அந்நாடு, தென்னுடு, விளக்கொளி, பேரிரைச்சல், நாற்புறம், பூஞ்சோலை.

III. சேர்த்து எழுதுக :—செல்வம் + செழிப்பு, இ + அணை, இரண்டு + புறம், தண்மை + நீர்.

IV. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக :—பரவசப்படுத்தும், வாரி வழங்குதல், ஊடுருவி, படிப்படியாக, இருமருங்கும், அடுக்கடுக்காக.

V. கீழே ஆறுகளின் பெயர்களும் அவற்றின் குறுக்கிலுள்ள அணைகளின் பெயர்களும் முறையின்றித் தரப்பட்டுள்ளன. அவற்றை முறைப்படுத்தி எழுதுக :—

| | |
|---|---|
| 1. நைல் | a. மேட்டூர் |
| 2. சிந்து | b. சென்னுர் |
| 3. காவிரி | c. சுக்கூர். |

VI. கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்கள் அமைக்கவும் :—

1. கிருஷ்ணராஜ சாகரத்திற்கு மேற்கில் காவிரியுடன் ——, —— என்ற இரு உபநதிகள் கலக்கின்றன.
2. அமெரிக்காவிலுள்ள மிகப் பெரிய அணைக்கு —— என்று பெயர்.

3. —— என்னும் அரசன் காலத்திலேயே காவிரியின் குறுக்கே அணைகட்ட முயற்சி செய்யப்பட்டது.
4. கிருஷ்ணராஜ சாகரத்தின் அருகில் —— என்னும் தோட்டம் உள்ளது.

V. பிருந்தாவனத்தைப் பற்றி ஒரு சிறு கட்டுரை எழுதுக.

## இலக்கணப் பயிற்சி

மற்ெறாரு, கற்களாலும், சிமெண்டினாலும், வழியே, அன்றோ, காணுங்கொல்—இச் சொற்களைக் கீழ்க்கண்டவாறு மற்று + ஒரு, கற்களால் + உம், சிமெண்டினால் + உம், வழி + ஏ, அன்று + ஓ, காணும் + கொல் என்று பிரிக்கலாம். இவற்றில் உள்ள மற்று, உம், ஏ, ஓ, கொல் என்னும் சொற்கள் இடைச் சொற்களாம். இச் சொற்கள் பெயர்வினைச் சொற்களைச் சார்ந்தே வரும்.

இந் நீர்த்தேக்கத்துக்கு இப்பெயர் சாலப் பொருத்தமுடைய தாகும்.

இதில் சால என்னும் சொல் மிகவும் என்ற பொருளில் வந்தது. இங்ஙனம் மிகுதிப் பொருளில் வரும் சொற்கள் உரிச் சொற்களாம்.

உறுதுயர், நனிதின்றான், தவப்பிஞ்சு என்னும் தொடர் களில் உறு, தவ, நனி என்பனவும் உரிச்சொற்களேயாம்.

# 8. புலவர் பெருமிதம்

சங்க காலத்தில் வாழ்ந்த நம் தமிழ்ப் புலவர்கள் தமிழ்ப் புலமையில் சிறந்து விளங்கியதோடு பல அருங் குணங்களையும் உடையவர்களாயிருந்தனர். அவற்றுள் அவர்கள் வறுமையிலும் செம்மையாய் வாழ்ந்ததையே சிறப்பாகக் கூற வேண்டும். அவர்கள் தங்களுடைய பெருமைக்கு இழிவு நேரக்கூடிய எந்தச் செயலையும் செய்ய மாட்டார்கள். ஒரு பழிச் செயல் செய்வதன் மூலம் இந்த உலகத்தையே பெற முடியுமென்றாலும் அவர்கள் அதனை விரும்பார். புகழ் கிடைப்பதாயின் உயிரையும் கொடுத்துப் புகழை அடையவே விரும்புவர். தங்களுடைய திறமையையும் தகுதியையும் அறியாமல் அரசர்கள் சிறிது பரிசு கொடுத்தால் புலவர்கள் அதனைப் பெற விரும்ப மாட்டார்கள். ஈ என்று பிறரிடம் சென்று யாசிப்பது இழிவானது; ஈ என்று கேட்பவருக்கு ஈயேனென்றல் அதனினும் இழிவானது; இரப்பவர்க்கு ஒரு பொருளைக் கொள் என்று கொடுத்தல் உயர்வானது; கொடுக்கும்போது தன்மான உணர்ச்சியுடன் வேண்டாம் என்று மறுத்தல் அவ்வாறு கொடுத்தலினும் உயர்வானதாகும். அத்தகைய பண்பு பெருமிதம் எனப்படும். தமிழ்ப் புலவர்களிடம் இத்தகைய பெருமித உணர்ச்சி மிகுதியாக இருந்தது.

சங்க காலத்தில் வாழ்ந்த புலவர்களில் பெருஞ்சித்திரனார் என்ற பெயருடையவர் ஒருவர் வாழ்ந்திருந்தார். அவருடைய பாடல்கள் சிறந்த ஓவியம் போல அழகிய கருத்துக்களை எடுத்துக் கூறுவன ஆகையால் அவர் அப்பெயர் பெற்றனர். புலவர்களிடம் இயற்கையாகக் காணப்படும் வறுமை

பெருஞ்சித்திரனாரையும் வருத்தியது. வறுமையி னால் அவர் வீட்டில் அடுப்பில் காளான் பூத்துக் கிடந் தது. குழந்தைகள் உணவில்லாமையால் வீட்டில் அடுக்கி வைத்துள்ள பழங்கலங்களைத் திறந்து ஒவ் வொன்றிலும் கையைவிட்டுத் துழாவிப் பார்த்து ஒரு பொருளும் கிடைக்காமையால் தேம்பி யழலாயினர். அக்குழந்தைகளின் கவனத்தை மாற்றப் புலி வரு கிறது என்று கூறி அச்சுறுத்தியும், நிலாவைக் காட்டி மகிழ்வித்தும் தாய் அவர்கள் அழுகையை மாற்று வாள். இங்ஙனம் வருந்தும் துன்பக் காட்சியைப் புலவர் எத்தனை நாள் சகித்துக் கொள்வார். யாரா வது ஒரு வள்ளலைக் கண்டு தம் வறுமையைக் கூறிப் பரிசில் பெற விரும்பிச் சென்றனர் புலவர்.

அவர் காலத்தில் **வெளிமான்** என்ற அரசன் ஒரு வன் பெரு வள்ளலாய் வாழ்ந்திருந்தான். அவனு டைய புகழைப் பலர் கூறக் கேட்ட பெருஞ்சித்திரனார் நேராக அம்மன்னனைக் காணச் சென்றார். புலவரு டைய தீவினையை என்னென்று சொல்வது ! பெருஞ் சித்திரனார் சென்ற சமயத்தில் வெளிமான் இறந்து போனதால் அவன் தம்பி **இளவெளிமான்** என்பவன் அரசாண்டு கொண்டிருந்தான். புலவர் இளவெளி மானை அடைந்ததும் தம் நிலையைக் கூறிப் பரிசில் கேட்டனர். இளவெளிமான் என்பவன் புலவர் இயல்பை அறியும் தகுதியில்லாதவன் ; ஈந்து உவக் கும் இன்பம் அறியாதவன். ஆதலால் அவன் பெருஞ்சித்திரனாரை ஒரு வறியவன் என்று எண்ணி அவருக்குச் சிறிது பொருளைத் தந்து போகச் சொன் னான். அவன் செயல் பெருஞ்சித்திரனாரின் உள்ளத் தைப் புண்படுத்திவிட்டது. தன்னுடைய கல்வியின் சிறப்பை அறிந்து கொள்ளாமல் ஒரு பிச்சைக்கார

னுக்குப் பொருள் கொடுப்பது போலச் சிறுபொருள் தந்த இளவெளிமானின் இழிகுணத்தை அவர் வெறுத்தார். வறுமையினுல் வாடும் தம் குடும்பத்தைக் காப்பதற்கு அவன் கொடுத்த சிறு பொருள் சிறிது உதவியாக இருக்கும் ; என்ருலும் தன் மானத்தை இழந்து அதனைப் பெற்றுக்கொள்ள அவர் விரும்பவில்லை. ஆகையால் பெருஞ்சித்திரனுர் இளவெளிமான் கொடுத்த பரிசிலை வாங்க மறுத்துச் சென்றுவிட்டார்.

மான உணர்ச்சியால் துடித்த பெருஞ்சித்திரனுர் தம் குடும்பத்தின் வறுமை நிலையையும் மறந்து விட்டார். எங்ஙனமேனும் தம் பெருமையை இளவெளிமான் உணருமாறு செய்ய வேண்டும் என்று விரும்பினுர். அக்காலத்தில் இரவலர் புரவலனுய் விளங்கிய குமண வள்ளலைக் கண்டு பரிசில் பெற அவர் முடிவு செய்தார். குமண வள்ளலின் முதிரமலை நாடு நெடுந் தூரத்தில் இருந்தது. ஆயினும் புலவர் தம் மனதில் எழுந்த உணர்ச்சியால் ஊக்கங்கொண்டு காடும் மலையும் கடந்து சென்ருர் ; முதிரமலை நாட்டை அடைந்தார் ; குமணனைக் கண்டார்.

பெருஞ்சித்திரனுர் வரவறிந்த குமண வள்ளல் எழுந்து நின்று எதிர் கொண்டழைத்து முகமன் கூறி ஓர் இருக்கையில் அமரச் செய்து உபசரித்தனன். அவனுடைய அன்பையும் பணிவையும் கண்ட புலவர் மனம் மகிழ்ந்தார். “ குமண வள்ளலே ! பாரி, ஓரி, மலையமான், எழினி, பேகன், ஆய், நள்ளி என்ற வள்ளல்கள் எழுவரும் இறந்த பின்பு இரந்து வரும் எம்போன்ற புலவர் துயர் துடைப்பதற்கு அவ்வள்ளல்களைப் போன்று நீயே ஆதரவாக இருக்கின்ருய். வறுமையால் வாடி வருந்தும் இரவலருக்குச் சோற்றைப் படைத்து அதனைச் சுற்றிலும், சந்திரனைச் சுற்றி

யுள்ள நட்சத்திரங்களைப் போல் பல பொன் பாத்திரங்களில் கறிவகைகளை வைத்து விரும்பி உண்ணச் செய்கின்றாய்; அவர்கட்கு வேண்டிய பொன்னும் மணியும் வரையாது வழங்குகின்றாய். ஆதலாலேயே நான் உன்னை நாடி வந்தேன். என் தாய் கோலே காலாகக் கொண்டு நடக்கும் முதியவள்; வெண்மையான நூலைப் போன்ற நரைத்த கூந்தலையுடையவள்; கண்ணில்லாக் காரணத்தால் வெளியே நடந்து வரவும் இயலாதவள். அத்தகைய முதியவளாகிய அவள் வறுமையால் உணவுமின்றி, 'என்னுயிர் நீங்கவில்லையே! நான் ஏன் இன்னும் உயிரோடு வாழவேண்டும்,' என்று கூறி வருந்திக் கிடக்கின்றாள். என் மனைவி பசியால் உடல் மெலிந்துள்ளாள்; தினமும் பறித்துப்.பறித்துப் பட்டுப்போன இடங்களில் புதிதாகத் தளிர்த்த குப்பைக் கீரையின் இளந்தளிர்களைப் பறித்து வந்து, அதனுடன் இட்டுச் சமைப்பதற்கு உப்பும் இல்லாமல், அக்கீரையை நீரிலே வேகவைத்துத் தானும் உண்டு குழந்தைகட்கும் கொடுத்து வாடிக் கிடக்கின்றாள். இவ்விருவர் மனமும் மகிழுமாறு எனக்கு நீ பரிசில் அளித்து அனுப்புதல் வேண்டும். நீ என் தகுதியை அறிந்து கொள்ளாமல் வெறுப்புடன் பெரிய யானையையே பரிசிலாக வழங்கினாலும் நான் அப்பரிசிலை விரும்ப மாட்டேன். உள்ள விருப்புடன் என் தகுதி யறிந்து நீ சிறிய குன்றிமணி யளவு பரிசு கொடுத்தாலும் அதுவே எனக்குப் பெரு மகிழ்ச்சி யளிக்கும்.

முதிரமலைத் தலைவனே! நான் உன்னை ஒன்று வேண்டிக் கொள்கின்றேன். என்னுடைய முயற்சியால் நான் பெற்றுச் செல்லும் பரிசிலைக் கண்டு என் மனைவி தன் துன்பம் நீங்கி மகிழ்ச்சி கொள்ள

வேண்டும் என்பது என் விருப்பம். அதனுல் ஒரு பெரிய யானை மீது நான் ஏறிச் செல்லுமாறு எனக்கு ஒரு பெரிய களிற்றையே பரிசாக வழங்க வேண்டும். என்னுடைய நிலையை எண்ணிப் பாராமல் பரிசு வழங்கும் உன்னுடைய மேன்மையான நிலையை எண்ணியாவது எனக்கு அப்பரிசிலை வழங்குவா யாக,'' என்று பெருஞ்சித்திரனுர் தம்முடைய வறுமை நிலையையும் தாம் விரும்பும் பரிசிலையும் தெளிவாக எடுத்துக் கூறினுர்.

பெருஞ்சித்திரனுர் தம் பெயருக்கு ஏற்பத் தம் குடும்பத்தின் நிலையைப் படம் பிடித்துக் காட்டுவது போல் எடுத்துக் கூறியது குமணனின் உள்ளத்தை உருக்கிவிட்டது. அவன் அவருக்கு அறுசுவையுண்டி யளித்து உபசரித்தான்; உயர்ந்த ஆடை அணிகளை வழங்கினுன்; பின்னர் அவர் விரும்பியவாறே ஒரு யானையைப் பரிசிலாக வழங்கி மகிழ்வித்தான்.

புலவர் யானையைப் பரிசிலாகக் கேட்டதும், அவ்வாறே குமணன் வழங்கியதும் நமக்கு வியப்பாக இருக்கிறதல்லவா? தமக்கே உணவில்லாத புலவர் யானைக்கு எங்ஙனம் உணவளிப்பார்? யானையைக் கட்டித் தீனி போட முடியுமா? என்பது பழமொழியன்றோ என்று நாம் நினைப்போம். யானைப் பரிசில் என்பதே முற்காலத்தில் வழங்கிய பரிசில்களில் சிறந்த தாகும். ஒரு யானையைப் பரிசிலாக வழங்கினுல் அதனுடன் அந்த யானையை வைத்துப் போற்றும் அளவுக்குப் பெருஞ் செல்வத்தையும் பரிசாக வழங்குவர். அவ்யானைப் பரிசைப் பெற்றவர் மீண்டும் வறுமை யடைவதுண்டோ?

இங்ஙனம் சிறந்த யானைப் பரிசிலைப் பெற்ற புலவர் குமணனை வாழ்த்தி யானைமீதேறித் தம்மூர்

நோக்கிச் சென்ருர். தம் பெருமையை எங்ஙன மேனும் தம்மை அவமதித்த இளவெளிமானுக்கு உணர்த்த வேண்டும் என்ற எண்ணத்தால் அல்லவா அவர் குமணனிடம் யானேப் பரிசிலே வேண்டிப் பெற்ருர். ஆதலால் அவர் நேராக இளவெளிமானது நாட்டை அடைந்தார்; அவனுடைய அரண்மனேக் கெதிரில் இருந்த காவல் மரத்தில் அந்த யானேயைக் கட்டினுர். காவல் மரம் என்பது பண்டைக் காலத் தில் அரசர்கள் தம் உயிரினும் மேலாகப் போற்றிக் காத்து வந்த மரமாகும். அம்மரம் தழைத்தால் அவர் கள் வாழ்வு தழைக்கும் என்றும், அது வாடினுல் அவர்கள் வாழ்வு குலேந்துவிடும் என்றும் அவர்கள் நம்பினர். அதனுல் அம்மரத்திற்கு யாரேனும் தீங்கு செய்தால் அதனேத் தமக்குச் செய்த தீங்காகக் கருதி அவர்களேக் கொன்று வீழ்த்துவர். தம்மை அவ மானப்படுத்திய இளவெளிமானுக்கு அறிவு புகட்ட எண்ணிய புலவர் அக்காவல் மரத்தில் யானேயைக் கட்டினுரென்ருல் அவர்தம் அஞ்சா நெஞ்சத்தை என் னென்று கூறுவது!

பின்னர் அவர் இளவெளிமானிடம் சென்று, "வேந்தே! எம்போன்ற இரவலரைக் காப்பவன் நீ ஒருவனே அல்லன். உன்னேத் தவிர வள்ளல்கள் பலர் இல்லாமலும் இல்லே. உலகில் இரவலர்களும் பலர் உள்ளனர்; அவர்கட்கு ஈகின்ற வள்ளல்களும் பலர் உள்ளனர் என்பதை நீ உணர்வாயாக. உன் னுடைய காவல் மரம் வருந்துமாறு யாம் கட்டியுள்ள பெரிய யானேயானது யாம் பெற்ற பரிசிலாகும். இப் போதாவது எம் தகுதியை நீ உணர்வாயாக. யாம் சென்று வருவோம்," என்று கூறி அவன் அரண் மனேயை விட்டு விரைந்து சென்றனர். பெருஞ்

சித்திரனுரின் பெருமித உணர்ச்சி இதனுல் விளங்கு கின்றதன்றே? தம்மைத் தாழ்வாக மதித்த இளவெளி மானே அவர் எங்ஙனம் தன் குற்றத்தை உணரச் செய்தனர் என்பதனை நினைத்துப் பாருங்கள். அரச ணுகிய இளவெளிமானை 'நீ' என்று தாழ்வாகவும் தம்மை 'யாம்' என்று உயர்வாகவும் கூறியமையும் அவருடைய பெருமித உணர்ச்சியை நன்கு விளக்கு வதாகும்.

பின்னர், பெருஞ்சித்திரனுர் தம் வீடு சென்று தம் வரவை எதிர் நோக்கி நிற்கும் தம் தாயையும் மனைவி மக்களையும் தாம் பெற்ற பரிசில்களால் மகிழச் செய் தார். அவர் தாம் பெற்று வந்த பரிசுப் பொருளைத் தம் மனைவியிடம் கொடுத்து, "இப்பரிசில் நான் குமணனைப் பாடிப் பெற்றதாகும். இதனைக்கொண்டு நீ அறம் செய்வாயாக. பிற்காலத்துக்கு வேண்டுமென்று சேர்த்து வைக்காதே. உனக்கு வேண்டியவர்க்கெல் லாம் கொடு; சுற்றத்தார்க்கெல்லாம் கொடு; நாம் வறுமையால் வாடியபோது கடன் கொடுத்தவர்க்கெல் லாம் கொடு; என்னைக் கேட்க வேண்டுமென்று இராதே. நானும் கொடுக்கிறேன்," என்று கூறி அப் பரிசிலைக் கொண்டு அறம் செய்யுமாறு கூறுகிருர். என்னே அவருடைய பரந்த உள்ளம்! வறுமையால் வாடியவர்கள் பொருள் பெற்றவுடன் அதனைக்கொண்டு இனி வறுமை யறியாமல் வாழ அன்றே கருதுவர்? பெருஞ்சித்திரனுரின் நிலையோ அதற்கு மாருக இருந் தது. அதற்குக் காரணம் அவர் கற்ற கல்வியும் அறம் செய்வதில் அவருக்கிருந்த பெரு விருப்பமுமேயாகும்.

பெருஞ்சித்திரனுரைப் போன்றே பெருமித உணர்ச்சியும் வறுமையிற் செம்மையும் உடையவர் களாய் வாழ்ந்த புலவர்கள் பலரைப் பற்றிய விவரங்

களைப் புறநானூறு என்ற சங்க இலக்கியத்திலிருந்து நாம் அறிந்து கொள்ளலாம். நீங்கள் ,பெரியவர் களானபின் அந்நூலைக் கற்று அவர்கள் அருங்குணங் களை அறிந்து கொண்டு அவற்றை உங்கள் வாழ்க்கை யிலும் கடைப்பிடிக்க முயல்வீர்களாக.

### குறிப்பு

கோல் - ஊன்று கோல்; ஈ - கொடு; தன் மானம் - தன் உயர்வைக் காக்கும் பண்பு; அச்சுறுத்தல் - பயமுறுத்தல்; சகித்தல் - பொறுத்துக் கொள்ளல்; வரையாது - எல்லையில்லா மல்; அறுசுவை உண்டி - இனிப்பு, புளிப்பு, கரிப்பு, கசப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்னும் ஆறு சுவைகளையுடைய உணவு.

### வினாக்கள்

1. தமிழ்ப் புலவர்களின் அருங்குணங்களைக் குறிக்க.
2. பெருஞ்சித்திரனார்—பெயர்க் காரணம் தருக.
3. பெருஞ்சித்திரனார் வள்ளலை நாடிச் செல்ல நேர்ந்தது ஏன்?
4. இளவெளிமான் தந்த பரிசைப் புலவர் ஏன் ஏற்றுக் கொள்ளவில்லை?
5. புலவர் தம் குடும்பத்தின் வறிய நிலையைக் குமண வள்ளலுக்கு எங்ஙனம் உணர்த்தினார்?
6. பெருஞ்சித்திரனார் இளவெளிமானுக்குத் தம் பெரு மையை எங்ஙனம் உணர்த்தினார்?
7. காவல் மரத்தைப் பற்றிக் குறிப்பு வரைக.
8. பெருஞ்சித்திரனார் தம் மனைவிக்குக் கூறிய அறிவுரை யாது?

### மொழிப் பயிற்சி

I. அகராதி பார்த்துப் பொருள் உணர்க:—தகுதி, ஓவி யம், காளான், துழாவி, முகமன், இருக்கை, தேம்பி.

II. எதிர்ப்பதம் தருக:—இழிவு, பழி, விரும்பார், தழைக்கும்.

III. சொந்த வாக்கியங்களில் அமைக்க:—தன்மான உணர்ச்சி, துழாவு, சகித்தல், புண்படுத்தல்.

IV. பிரித்தெழுதுக:—ஈயேனென்றல், உணவில்லாமையால், பழங்கலம், ஒவ்வொன்று, என்னென்று, என்றெண்ணி, வரவறிந்த.

V. சேர்த்து எழுதுக :—உணவு + இன்றி ; இளமை + தளிர்; அ + கீரை ; தம் + ஊர்.

VI. இரந்து—இறந்து; நரை—நறை ; பரந்த—பறந்த. இவற்றின் பொருளில் வேற்றுமைகளை அறிக.

VII. இச்சொற்களுக்குப் பெண்பால் தருக :—களிறு, புலவர் பெருமான்.

VIII. இப்பாடத்தில் மேற்கோள் குறி முதலிய நிறுத்தக் குறிகள் அமைந்துள்ள முறையை நன்கு அறிக.

IX. இப்பாடத்திலுள்ள பழமொழியை எழுதுக.

## இலக்கணப் பயிற்சி

1. **பெருஞ்சித்திரனுர் சங்க காலத்தில் வாழ்ந்தார்.**

இவ்வாக்கியத்தில் வாழ்ந்தார் என்ற வினைமுற்று ஒன்று மட்டும் உள்ளது. பெருஞ்சித்திரனுர் என்னும் எழுவாய் ஒன்று உள்ளது. இங்ஙனம் ஓர் எழுவாயும் ஒரு பயனிலையும் கொண்ட வாக்கியம் தனிநிலை வாக்கியமாம்.

2. **புலவர் காடும் மலையும் கடந்து சென்ருர் ; முதிர மலை நாட்டை அடைந்தார் ; குமணனைக் கண்டார்.**

இவ்வாக்கியத்தில் சென்ருர், அடைந்தார், கண்டார் என்னும் மூன்று பயனிலைகள் உள்ளன. இவற்றிற்குப் புலவர் என்னும் ஒரே சொல் எழுவாயாக அமைந்துள்ளது. இங்ஙனம் ஓர் எழுவாய் பல பயனிலைகளைக் கொண்டு முடியும் வாக்கியத்திற்குத் தொடர் நிலை வாக்கியம் என்று பெயர்.

3. **பெருஞ்சித்திரனுர் குமணனை நோக்கி, “ நீ என் தகுதியறிந்து குன்றிமணியளவு பரிசு கொடுத்தாலும் அதுவே எனக்குப் பெருமகிழ்ச்சி அளிக்கும்,” என்று கூறினுர்.**

இவ்வாக்கியத்தைக் கவனிக்க. இதில் பெருஞ்சித்திரனுர் கூறினுர் என்னும் முதன்மையான வாக்கியமும், “ நீ என்......... அளிக்கும் ” என்னும் சார்பு வாக்கியமும் அமைந்துள்ளமையால் இது கலவை வாக்கியம் எனப்படும்.

எனவே வாக்கியங்கள் (1) தனிநிலை வாக்கியம், (2) தொடர் நிலை வாக்கியம், (3) கலவை வாக்கியம் என மூன்று வகைப்படும்.

# செய்யுட் பகுதி



## I. கடவுள் வணக்கம்

அப்பாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம்நான் அன்புசெயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும் எங்கணும்நான் சென்றே
எந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்
செப்பாத மேனிலைமேற் சுத்தசிவ மார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்
தப்பேதும் நான்செயினும் நீபொறுத்தல் வேண்டும்
தலைவ! நினைப் பிரியாத நிலைமையும்வேண் டுவனே.

—இராமலிங்க சுவாமிகள்

### ஆசிரியர் குறிப்பு

**இராமலிங்க சுவாமிகள் :** இவர் சிதம்பரத்தை அடுத்த மருதூரில் பிறந்தவர்; கருணீக வேளாளர் மரபைச் சார்ந்தவர்; சமரச நோக்கமுடையவர். இவருடைய பாடல்கள் எளிமையும் இனிமையும் கொண்டவை. இப்பாடல்கள் 'திரு அருட்பா' என்னும் நூலாக வெளிவந்துள்ளன. இவர் வடலூரில் பல அறங்கள் செய்துள்ளார். காலம்: 1823—1873.

### அருஞ்சொல் விளக்கம்

பார் - பூமி ; பதம் - நிலை ; எந்தை - என் தந்தை ; இயம்பியிடல் - சொல்லுதல் ; மேனிலை - மேல் + நிலை; சுத்தம் - தூய்மையான ; சிவமார்க்கம் - சிவபெருமானைத் தொழும் நெறி ; தப்பு - தவறு ; செயினும் - செய்தாலும் ; பொறு × ஒறு.

### வினாக்கள்

1. இராமலிங்கர் இறைவனை யாது வேண்டுகிறார் ?

2. இப்பாடலி லிருந்து இராமலிங்கரின் எக்குணங்கள் வெளிப்படுகின்றன ?

### பயிற்சி

1. பிரித்தெழுதுக :—ஆருயிர், அருட்புகழை, மேனிலை, திகழ்ந்தோங்க, அருட்சோதி, தப்பேதும்.

2. வேண்டுதல், புரிதல். செயல், பொறுத்தல்—இவை எவ்வகைப் பெயர்கள் ?

3. நினது, புகழை, தலைவ—இச்சொற்கள் எவ்வேற்றுமையைச் சார்ந்தன.

4. பொறுத்தல், பிரியாத, தப்பு, மேனிலை—எதிர்ப்பதம் தருக.



## II. இயற்கை இன்பம்

### ஞாயிறு

வண்டுகள் யாழை மீட்ட
வரிக்குயில் பண்ணி சைக்க
அண்மையில் கல்லில் பாயும்
அருவியின் முழவிற் கேற்பக்
கொண்டையைக் குலுக்கிச் சேவல்
குரலிசைத் தாளம் சேர்க்கக்
கொண்டல்சூழ் வான ரங்கில்
நீயாடும் கூத்தென் சொல்வேன் ! (1)

### திங்கள்

திங்களில் ஒருநாள் உன்றன்
திருமுகம் சிரிக்கும் ; மற்றும்
தங்கிய நாட்கள் தோறும்
தண்முகம் அளவில் தேயும் ;

இங்குளார் அடையும் இன்ப
துன்பத்தை எடுத்துக் காட்டும்
மங்காத அறநூ லானய்
மாசற்ற மணியே வாழி. (2)

## முகில்

விளைவயல் பொட்டல் என்ற
வேற்றுமை கருதா தென்றும்
அளித்துயிர் ஓம்பு கின்றாய் !
அன்னையே முகிலே ! வாழி !
விளைவினை மக்க ளெல்லாம்
பொதுவாகத் துய்க்கும் மேன்மை
முளைத்திடில் தமிழர் நாட்டில்
முளைத்திடும் இன்ப வாழ்வே. (3)

—வாணிதாசன்

## ஆசிரியர் குறிப்பு

**வாணிதாசன் :** இவர் தற்காலத்திய சிறந்த புலவர்களில் ஒருவர். இவர்தம் பாடல்கள் எளிமையும் இனிமையும் வாய்ந்தவை. இவர் புதுவையில் கல்வே கல்லூரியில் தமிழ்த் தொண்டாற்றி வருகிறார்.

## அருஞ்சொல் விளக்கம்

**1.** ஞாயிறு - சூரியன் ; யாழ் - வீணை போன்ற இசைக் கருவி ; வரிக்குயில் - கோடுகளை உடைய குயில் ; பண் - இராகம்; இசைக்க - பாட ; அருவி - மலைமீதிருந்து பாயும் ஆறு ; முழவு - மத்தள ஒலி ; கொண்டல் - மேகம் ; வான் அரங்கு - ஆகாய மாகிய மேடை ; கூத்து - நடனம்.

2. திங்கள் - மாதம் (சந்திரன்) ; ஒருநாள் - பௌர்ணமி அன்று ; சிரிக்கும் - முழுநிலாவுடன் மகிழ்ந்து விளங்கும்; இங்கு - இவ்வுலகில் ; மங்காத - அழியாத.

3. முகில் - மேகம் ; பொட்டல் - வெளியான சமநிலம் ; அளித்து - மழை நீரைத் தந்து ; விளைவு - விளைபொருள்கள் ; துய்க்கும் - அனுபவிக்கும் ; முளைத்திடில் - உண்டானல்.

### வினக்கள்

1. ஞாயிறு எங்குக் கூத்தாடுவதாக ஆசிரியர் வருணிக்கிருர் ?

2. ஞாயிறு கூத்தாடும் நடன அரங்கில் எவ்வகை இசைகள் காணப்படுகின்றன ?

3. சந்திரனை அழிவு பெருத அறநூல் என்று எங்ஙனம் கூறலாம் ?

4. உலகிலுள்ளார் அடையும் இன்ப துன்பங்களைத் திங்களின் எச்செயல்கள் காட்டுகின்றன ?

5. ஆசிரியர் முகிலை ஏன் வாழ்த்துகின்ருர் ?

6. தமிழ் நாட்டில் என்று இன்ப வாழ்வு உண்டாகும் என்று ஆசிரியர் கருதுகிருர் ?

### பயிற்சி

1. பிரித்தெழுதுக:—பண்ணிசைக்க, குரலிசை, வானரங்கு, தண்முகம், அங்குளார்.

2. மங்காத, மாசற்ற, அறம், அண்மை, வேற்றுமை, மேன்மை—எதிர்ப்பதங்கள் தருக.

3. மேகம், சூரியன், சந்திரன்—இப்பொருளுடைய வேறு சொற்களைக் கூறுக.

# III. அறவுரை

## 1. அறநெறிச்சாரம்

கீழ் மக்கள் மனம் கல் போன்றது

வைகலும் நீருள் கிடப்பினும் கல்லிற்கு
மெல்லென்றல் சால அரிதாகும்—அஃதேபோல்
வைகலும் நல்லறம் கேட்பினும் கீழ்கட்குக்
கல்லினும் வல்லென்னும் நெஞ்சு. (1)

பெரியோர் தாய் போன்றவர்

காலொடு கையமுக்கிப் பிள்ளையை வாய்நெறித்துப்
பாலொடு நெய்பெய்யும் தாயனையர்—சால
அடக்கத்தை வேண்டி அறன்வலிந்து நாளும்
கொடுத்துமேற் கொண்டொழுகு வார். (2)

உடலாலும் பொருளாலும் பிறர்க்கு உதவுக

உப்புக் குவட்டின் மிசையிருந்து உண்ணினும்
இட்டுணக் காலத்துக் கூராதாம்—தொக்க
உடம்பும் பொருளும் உடையானோர் நன்மை
தொடங்காக்கால் என்ன பயன் ? (3)

இரக்கமும் ஈகையும்

ஒன்றாக நல்ல(து) உயிரோம்பல் ஆங்கதன்பின்
நன்றாய்ந் தடங்கினார்க் கீத்துண்டல்—என்றிரண்டும்
குன்றாப் புகழோன் வருகென்று மேலுலகம்
நின்றது வாயில் திறந்து. (4)

### மக்கள் பிறவியின் இன்பம்

எப்பிறப் பாயினும் ஏமாப் பொருவற்கு
மக்கட் பிறப்பிற் பிறிதில்லை—அப்பிறப்பில்
கற்றலும் கற்றவை கேட்டலும் கேட்டதன்கண்
நிற்றலும் கூடப் பெறின். (5)

—முனைப்பாடியார்

### குறிப்பு

அறநெறிச்சாரம்: அறம்+நெறி+சாரம்: தரும வழி களில் மிகவும் சாரமானவற்றைப் பற்றிக் கூறும் நூல் என்பது இதன் பொருள். சாரமானவை என்றால் முக்கியமானவை என் பது பொருள். இதன் ஆசிரியர் திருமுனைப்பாடி நாட்டில் தோன் றியவர். ஆதலால் முனைப்பாடியார் என்று வழங்கப் பெற்றார். இவர் சைன மதத்தைச் சார்ந்தவர்; ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்தவர். இந்நூலில் சிறந்த நீதிகள் மிகவும் தெளிவான உதாரணங்களுடன் விளக்கப்பட்டுள்ளன.

### அருஞ்சொல் விளக்கம்

1. வைகலும் - நாள்தோறும்; மெல்லென்றல் - மென் மையை அடைதல்; சால அரிது - சிறிதும் இல்லை; அறம் - அறநூல்கள்; கீழ்கட்கு - (கீழ்கள்+கு) தாழ்ந்தவர்களுக்கு; வல்லென்னும் - (கல்லைவிட) வலிமையுடையதாகும்.

2. சால - மிகவும்; அடக்கத்தை - அடங்கியிருக்குமாறு செய்வதை; வலிந்து - (தாமாகவே) வற்புறுத்தி; மேற்கொண்டு ஒழுகுவார் - அடக்கி ஆளும் பெரியோர்; நெறித்து - திறக்குமாறு செய்து; நெய் - ஆமணக்கெண்ணெய்; அனையர் - போன்றவர்.

3. குவடு - குவியல்; உணுக்கால் - உண்ணுவிடின்; கூராது - (சுவை) மிக்கதாகாது; தொக்க - பொருந்திய; ஓர் நன்மை - ஒப்பற்ற அறம்.

4. ஒன்றாக நல்லது - மற்றொன்று தன்னுடன் ஒப்பில்லாமல் சிறந்தது; ஆய்ந்து - சிறந்த நூல்களை ஆராய்ந்து; அடங் கினார் - கற்ற வழியில் நடப்பவர்; ஈத்து+உண்டல் - பிறர்க்கு அளித்துத் தானும் உண்ணல்; குன்றா - குறையாத, நிறைந்த; வருக+என்று: வருகென்று.

5. ஏமாப்பு - இன்பம் செய்வது ; பிறிது - வேறு ; நிற்றல் - ஒழுகுதல் ; கூடப்பெறின் - பொருந்தப் பெற்ருல்.

### விஞக்கள்

1. கீழ்மக்களின் மனம் எத்தன்மையுடையது? இதற்குத் தரப்பட்ட உவமை யாது?

2. பெரியோர் எங்ஙனம் தாய்போன்றவராவர் ?

3. உடம்பும் பொருளும் பெற்றவர் வாழ்க்கை எப்போது பயன் பெறும் ? இதனை விளக்க வந்த உவமையைக் குறிப்பிடுக.

4. எப்பண்புகளை உடையவனை விண்ணுலகத்தின் வாயில் 'வருக' என்று வரவேற்கும் ?

5. மக்கட் பிறப்பு எப்போது இனிமையுடையதாகும் ?

### பயிற்சி

1. பிரித்தெழுதுக :—தாயனையர் ; நன்ருய்ந் தடங்கினர்க் கீத்துண்டல் ; நல்லறம் ; கையமுக்கி.

2. சொந்த வாக்கியங்களில் எழுதுக :—வைகலும், சால, குன்ரு.

3. கல்லிற்கு, காலொடு, அடக்கத்தை, குவட்டின்மிசை, பிறப்பின்—இச்சொற்கள் எவ்வேற்றுமையில் வந்தன ?

## 2. ஆசாரக் கோவை

### செய்வதும் தவிர்ப்பதும்

துன்பத்துள் துன்புற்று வாழ்தலும் இன்பத்துள்
இன்ப வகையான் ஒழுகலும்—அன்பின்
செறப்பட்டார் இல்லம் புகாமைஇம் மூன்றும்
திறப்பட்டார் கண்ணே உள. (1)

### இகழத் தகாதன

அளையுறை பாம்பும் அரசும் நெருப்பும்
முழையுறை சீயமும் என்றிவை நான்கும்
இளைய எளிய பயின்றனஎன் றெண்ணி
இகழின் இழுக்கம் தரும். (2)

### பொன்போல் போற்றத்தக்கன

தன்னுடம்பு தாரம் அடைக்கலம் தன்னுயிர்க்கென்(று)
உன்னித்து வைத்த பொருளோ டிவைநான்கும்
பொன்னினைப் போல்போற்றிக் காத்துய்க்க காவாக்கால்
மன்னிய ஏதம் தரும். (3)

### ஒழுக்கத்தால் உயர்வடைவோர்

நந்தெறும்பு தூக்கணம் புள்காக்கை என்றிவைபோல்
தங்கருமம் நல்ல கடைப்பிடித்துத்—தங்கருமம்
அப்பெற்றி யாக முயல்பவர்க் காசாரம்
எப்பெற்றி யானும் படும். (4)

### ஒன்றைக் கூறும் முறை

விரைந்துரையார் மேன்மேல் உரையார் பொய்யாய
பரிந்துரையார் பாரித் துரையார்—ஒருங்கெனைத்தும்
சில்லெழுத்தி னலே பொருளடங்கக் காலத்தால்
சொல்லுக செவ்வி அறிந்து. (5)

—பெருவாயின் முள்ளியார்

### குறிப்பு

**ஆசாரக் கோவை :** பல வகைப்பட்ட சிறந்த ஒழுக்கங்களை வரிசைப்படுத்திக் கோத்த நூலாதலின் இந்நூல் இப்பெயர் பெற்றது. இந்நூல் பதினெண்கீழ்க் கணக்கு நூல் வகையைச் சார்ந்தது. இதிலுள்ள பாடல்கள் மிக எளிதில் பொருளுணரத் தக்கவை. இதன் ஆசிரியர் பெருவாயின் முள்ளியார் ஆவர்.

### அருஞ்சொல் விளக்கம்

1. வாழ்தல் - மனந்தளராமல் வாழ்க்கை நடத்தல் ; ஒழுகல்- வாழ்தல் ; அன்பின் செறப்பட்டார் - அன்பில்லாதவர்கள் ; இல்லம் - வீடு ; திறப்பட்டார் - நல்லொழுக்கத்தில் சிறந்தவர்.

2. அளை - புற்று ; அரசு - அரசன் ; முழை - குகை ; சீயம் - சிங்கம் ; பயின்றன - பழக்கமானவை ; இழுக்கம் - துன்பம்.

3. தாரம் - மனைவி ; அடைக்கலம் - பாதுகாப்பாகத் தரப் பட்ட பொருள் ; உன்னித்து - கருதி ; மன்னிய - பொருந்திய ; உய்க்க - வைத்திடுக ; ஏதம் - துன்பம்.

4. நந்து - முயற்சியுள்ள ; தூக்கணம்புள் - தூக்கணங் குருவி ; புள் - பறவை ; கடைப்பிடித்து - மேற்கொண்டு ; அப் பெற்றித்தாக - அத்தன்மையுடையதாக ; எப்பெற்றியானும் - எவ்வாருயினும் ; படும் - உண்டாகும் ; ஆசாரம் - ஒழுக்கம்.

5. பரிந்து - விரும்பி ; பாரித்து - பெருக்கி ; ஒருங்கு - ஒன்ருக ; எனைத்தும் - எவ்வளவினதாயினும் ; சில்லெழுத்து - சில + எழுத்து ; பொருளடங்க - பொருளுடையதாக ; காலத்தால்- காலம் அறிந்து ; செவ்வி - சமயம்.

### வினுக்கள்

1. ஒழுக்கமுடையவர் செய்யத் தகுவன எவை? தகாதது எது ?

2. எவற்றை எக்காரணம் பற்றி இகழ்தல் கூடாது ? ஏன் ?

3. பொன்போல் போற்றத் தகுவன எவை ?

4. எத்தகையவர் ஒழுக்கத்தில் சிறந்து விளங்குவர் ?

5. ஒழுக்கமுடையவர் எவ்வுயிர்களைப் பின்பற்றவேண்டும் ? ஏன் ?

6. சொல்வன்மை பெற ஒருவர் கவனிக்கத்தக்கன யாவை ?

### பயிற்சி

1. பிரித்தெழுதுக :—அளையுறை ; என்றிவை ; தன்னுயிர்; காத்துய்க்க ; சில்லெழுத்து.

2. நல்லொழுக்கங்களின் சிறப்பைப்பற்றிப் பத்து வரிகள் எழுதுக.

# IV. கதை

## 1. மலையும் அணிலும்

'அற்பத் திருடா! என்றெனை அழைத்த
வெற்பே! யானும் விளம்பக் கேளாய்;
அளக்க லாகா அளவும் பொருளும்
துளக்க லாகா நிலையும் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வன்மையும் உனக்கென்(று)
உரைமொழி முற்றும் உண்மையே; ஆயின்,
ஒருவகைப் பொருளின் ஒருல காமோ?
ஒரு மழை வெயிலின் ஓராண்டு தேறுமோ?
பற்பல பொருளும் பற்பல பருவமும்
ஒன்றுய்க் கூடினே உலகாம்; ஆண்டாம்;
ஆதலின் யானிவ் வகிலமீ துதித்தே
இருப்பதை இழுக்கா எண்ணவும் மாட்டேன்;
என்தொழில் இயற்றவும் யாவர் வேறுளார்?
உன்பெரும் உருவெனக் கில்லை; உனக்கும்
என்சிறு வடிவிலை; மேலும், என்றன்
உள்ளக் களிப்பில் உற்று நோக்கில்
எள்ளத் தனையும் உனக்கிலை யிலையே;
அணிற்பிளை சாடி ஓடி அலைந்து
விளையா டற்கு விரிவிடம் பெறுவாய்;
ஐய மிதற்கிலை; அடலும் ஆற்றலும்
ஒவ்வொரு வர்க்கும் ஒவ்வொரு விதமாம்;
அறத்தொடும் முறையொடும் ஆழ்ந்த அறிவொடும்
அனைத்துமிவ் வுலகில் அமைக்க லாயின;
வனங்களை முதுகில் வகித்து நின்றிட
வல்லைநீ யாயின், மற்றிங் கெனைப்போல்
நெல்லைக் கொறிக்க நின்னு லாகுமோ?

யாவரே பெரியர் யாவரே சிறியர் ?
ஒன்றிற் பெரியார் ஒன்றிற் சிறியராம் ;
ஒன்றிற் சிறியர் ஒன்றிற் பெரியராம் ;
ஆதலின், அற்பர் ஆகா தவரென
ஓதுதல் மடமையின் சாதனை யாமே.

—தேசிக விநாயகம் பிள்ளை

## ஆசிரியர் குறிப்பு

**தேசிக விநாயகம் பிள்ளை :** இவர் திருவாங்கூர் சமஸ்தானத்தைச் சார்ந்த தேரூர் என்னும் கிராமத்தில் 1876-ஆம் ஆண்டில் பிறந்தவர் ; திருவனந்தபுரத்தில் பெண்களுக்கு உரிய அரசர் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தார் ; தற்போது ஓய்வு பெற்று நாகர் கோயிலை அடுத்துள்ள புத்தேரியில் வாழ்ந்து வருகிறார். இவர்தம் பாடல்கள் இனிமையும் எளிமையும் வாய்ந்தவை. இவர் பாடல்களின் தொகுதியே **மலரும் மாலையும்** என்னும் சிறந்த நூலாம்.

## அருஞ்சொல் விளக்கம்

வெற்பு - மலை ; விளம்ப - சொல்ல ; துளக்கல் - அசைத்தல் ; வறப்பினும் - மழை பெய்யாது வறண்ட காலத்திலும் ; வண்மை - ஈகைக் குணம் ; ஆண்டு - வருஷம் ; தேறுமோ - கணக்கிடப்படுமோ ; அகிலமீது - உலகில் ; இழுக்கு - குற்றம் ; உரு-வடிவம் ; உள்ளக் களிப்பு - மன மகிழ்ச்சி ; அணிற் பிள்ளை - சிறு அணில் ; சாடி - மோதி ; அடல் - வெற்றி ; வனம் - காடு ; சாதனை - விளைவு.

## வினாக்கள்

1. மலையின் சிறப்பியல்புகள் யாவை ?
2. ‘அகிலமீதுதித்தே இருப்பதை இழுக்கா எண்ணவும் மாட்டேன்’ என்று அணில் கூறக் காரணம் என்ன ?
3. ‘அடலும் ஆற்றலும் ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு விதமாம்’—விளக்குக.
4. அணில் மலையைக் காட்டிலும் தனக்குள்ள சிறப்பியல்பாக எதனைக் கூறுகிறது ?

5. மடமையின் சாதனே எது?
6. ஒருவரை அற்பர் என்றிகழ்தல் கூடாது. ஏன்?

### பயிற்சி

1. பிரித்து எழுதுக :—ஒருலகு, பற்பல, உள்ளக்களிப்பு, அணிற்பிளே, ஒவ்வொரு, துளக்கலாகா.

2. சேர்த்தெழுதுக :—ஒரு + ஆண்டு ; சிறுமை + வடிவு ; எள் + அத்தனேயும் ; விரிவு + இடம் ; ஒருவர் + ஒருவர்.

3. அறிந்து கொள்க :—துளக்கலாகா - துளக்கலாகாத ; அளக்கலாகா - அளக்கலாகாத ; இழுக்கா - இழுக்காக ; பிளே - பிள்ளே ; இலே - இல்லே ; ஆம் - ஆகும்—இச் சொற்களேக் கவனித்தால் செய்யுட்களில் சில சொற்களில் சில எழுத்துக்கள் மறைந்து வருவதுண்டு என்பது விளங்கும். மறைந்து நிற்றல் என்பதனேத் தொக்கு நிற்றல் என்பர்.

## 2. துஷ்டபுத்தி கெட்ட கதை

### பஞ்சதந்திரம்

துட்டபுத்தி என்பவன்தான் பிதாவும் தானும்
துஞ்சினுன் என்னலுமக் கதையே தென்னப்
பட்டணமொன் றுண்டதிலே வணிகர் ஈன்ற
பாலரிரு வோரொருவன் தரும புத்தி ;
துட்டபுத்தி மற்றெருவன் ; இவர்கள் கூடித்
தூரத்தில் நிதிதேடப் போனுர் ; அங்கே
இட்டமுடன் தருமபுத்திக் காயி ரம்பொன்
எய்தவவன் தனக்கெய்தா திடருற் றுனே. (1)

ஆயிரம்பொன் கிடைத்திருந்தும் விசார மென்ன?
ஐந்நூறைந் நூறுகப் பகிர்ந்து கொள்வோம் ;
நீயிரங்கல் என்றுதர்ம புத்தி வைத்த
நேசத்தால் அங்கவனேக் கூட்டிப் போக,

நியாயமல்ல இதையூரிற் கொண்டு போதல் ;
நாமிந்த மரத்தின்கீழ்ப் புதைத்து வைத்துப்
போயிதனை மற்றொருநாள் எடுத்துப் போதல்
புத்தியென்றே துஷ்டபுத்தி போதித் தானே. (2)

அன்னவன்சொற் படிகேட்டோர் மரத்தின் கீழே
ஆயிரம்பொன் னையும்புதைத்து வைத்துப் போனார்;
பின்னிரவில் துஷ்டபுத்தி கொண்டு போனான் ;
பிறகொருநாள் இருவருமாய்க் கூடிக் கொண்டு
பொன்னிருந்த இடம்பார்த்தார் ; காணார் துஷ்ட
புத்திநீ இதையெடுத்துப் போக லாமோ ?
என்னவவன் நீயெடுத்துப் போனாய் என்ன
இருவரும்போய் வழக்கர்முன்னம் இயம்பி னாரே. (3)

ஒருவர்மே லேயொருவர் சாற்ற, அந்த
ஊர்வழக்கர் சாட்சிபிற ருண்டோ வென்ன,
இருவருமே அறிந்ததல்லால் பிறரங் கில்லை ;
என்றுதர்ம புத்திசொல்ல, இதற்குச் சாட்சி
மரமுரைக்கு மென்றுதுஷ்ட புத்தி சொல்ல,
வழக்கரெலாம் அதிசயமாய் மரத்தைக் கேட்போம் ;
இருள்விடிந்த பின்வாரும் நீவி ரென்றார் ;
இல்லிடத்துக் கவரவரு மேகி னாரே. (4)

துட்டபுத்தி தன்னுடைய பிதாவை அந்தத்
தொன்மரப்பொந் தொளித்துநீ கூறு கென்ன,
நட்டம்வரும் நீநினைத்த நினைவி னாலே
நமக்கின்று முன்னமொரு நாகம் கொக்கின்
முட்டைதனைக் களவுகொள்ளக் கொக்கு நண்டின்
மொழிப்படியே கீரிவளை தொடுத்துப் பாம்பின்
வட்டவளை மட்டாக மீனைப் போட
வந்ததொருகீ ரியும்பாம்பை வதைத்த தென்ன, (5)

தந்தையுரைத் ததுங்கேளான், வலிமை யாலே
தானிழுத்துப் போயிருளில் தருவி னூழ்ந்த
பொந்தினுள்ளே அங்கவனை வைத்து மீளப்
பொழுதுவிடிந் ததன்பின்பு வழக்கர் கூடி
வந்துநின்று கேட்கவவன் தர்ம புத்தி
வணிகனெடுத் தானென்றே கூற லோடும்
சிந்தையதி சயமாகி வழக்க ரீது
செப்பினது புதுமையென்றே செப்பி னரே. (6)

இதுகபடம் என்றுதர்ம புத்தி எண்ணி
ஏறிமரப் பொந்திலெரி தழலை மூட்ட
அதிலிருந்த கிழவணிகன் பதைத்து வீழ்ந்தே
ஐயகோ! துஷ்டபுத்தி கெடுத்தா னென்ன
மதியுடைய வழக்கரும்போய் அரசர் முன்னே
வகுத்தலுமங் கவன்தன்னை வதைத்தார்; தந்தை
குதிகொளன லால்வெதும்பி மாய்ந்தான் பொன்னும்
குறையாமல் தர்மபுத்தி கொடுபோ னனே. (7)

—வீரமார்த்தாண்டதேவர்

### ஆசிரியர் குறிப்பு

**வீரமார்த்தாண்ட தேவர்:** இவர் தமிழில் உரைநடை வடிவில் வழங்கிவந்த பஞ்சதந்திரக் கதையை இனிய எளிய விருத்தப் பாடல்களால் பாடியவர். பஞ்சதந்திரம் என்னும் நூல் நட்புப் பிரித்தல், நட்புப் பேறு, அடுத்துக் கெடுத்தல், பெற்றதை இழத்தல், ஆராயாது செயல் என்ற ஐந்து தலைப்புக்களை உடைய தாய்ப் பல கதைகள் மூலம் அரிய நீதிகளைப் புகட்டும் ஓர் அரிய நூலாம்.

### அருஞ்சொல் விளக்கம்

1. பிதா - தந்தை; துஞ்சினன் - இறந்தான்; நிதி - மிக்க செல்வம்; இடர் - துன்பம். 2. விசாரம் - கவலை; பகிர்ந்து - பிரித்து; இரங்கல் - வருந்தாதே; புத்தி - அறிவுடைமை; 4. சாற்ற - (குற்றம்) சொல்ல; ஊர்வழக்கர் - நியாயாதிகாரி; இல் - வீடு. 5. ஏகினர் - சென்றார்; தொன் மரம் - பழமையாகிய மரம்; நட்டம் - தீங்கு; தொடுத்து - தொடங்கி; நாகம் - பாம்பு.

6. தரு - மரம்; சிந்தை - மனம்; செப்பினது - கூறியது.
7. கபடம் - வஞ்சனை; தழல் - தீ; ஐயகோ - ஐயோ; மதி - அறிவு; குதிகொள்அனல் - மூண்டு எரியும் தீ; வெதும்பி - வெந்து; வகுத்தலும் - கூறுதலும்.

## வினாக்கள்

1. 'அவன் தனக்கு எய்தாது இடருற்றனே'—யார்? ஏன் இடருற்றான்?

2. தருமபுத்தி நற்குணம் நிறைந்தவன் என்பதனைச் சான்று தந்து விளக்குக.

3. துஷ்டபுத்தி தருமபுத்திக்குப் போதித்தது யாது? ஏன் அவ்வாறு போதனை செய்தான்?

4. துஷ்டபுத்தியும் தருமபுத்தியும் ஊர் வழக்கரிடம் ஏன் சென்றனர்?

5. 'சாட்சி மரம் உரைக்கும்'—என்று கூறிய துஷ்டபுத்தி என்ன எண்ணத்தோடு அவ்வாறு கூறினான்?

6. துஷ்டபுத்திக்குத் தந்தை கூறிய அறிவுரை யாது?

7. 'ஈது செப்பினது புதுமை'—சந்தர்ப்பத்தோடு விளக்குக.

8. தருமபுத்தி துஷ்ட புத்தியின் சூழ்ச்சியை எங்ஙனம் வெளிப்படுத்தினான்?

9. துஷ்டபுத்தி, தருமபுத்தி—இப்பெயர்கள் எவ்வாறு பொருந்தும்?

10. இக்கதையினால் நீங்கள் அறியும் நீதி என்ன?

## பயிற்சி

1. பிரித்து எழுதுக:—மரப்பொந்து, கதையேது, இடருற்றான், பொன்னிருந்த, கூறுகென்ன, வட்டவளை, கிழவணிகன், கேட்கவவன்.

2. சேர்த்து எழுதுக:—ஐந்து + நூறு, தொன்மை + மரம், பின் + இரவு, அங்கு + அவனை, எய்த + அவன்.

3. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக:— துஞ்சினான், விசாரம், சாற்ற, ஏகினார், தழல்.

4. அறிந்து கொள்க:—கொடு போனான்; கொண்டு போனான்; கொண்டு - என்பதில் உள்ள 'ண்' மறைந்து வந்தது. ஈது - இது என்ற சொல் முதல் நீண்டு வந்தது.

5. கீரிப்பிள்ளை பாம்பைக் கொன்ற கதையைப் பதினைந்து வரிகளில் எழுதுக.

# V. பல்சுவை

## தனிப் பாடல்கள்

### உழவின் சிறப்பு

ஏரும் இரண்டுளதாய் இல்லத்தே வித்துளதாய்
நீரருகே சேர்ந்த நிலமுமாய்—ஊருக்குச்
சென்றுவர அண்மையதாய்ச் செய்வாரும் சொற்கேட்டால்
என்றும் உழவே இனிது. (1)

### நெசவின் பெருமை

செய்யும் தொழிலனைத்தும் சீர்தூக்கிப் பார்க்குங்கால்
நெய்யும் தொழிற்கு நிகரில்லை—வையகத்தில்
தெள்ளு தமிழ்வேதஞ் செப்பிஅந்நாள் சீர்படுத்தும்
வள்ளுவனுர் கொண்டதல்ல வா. (2)

### குடையின் பயன்கள்

பகலோன் தெறுகிரணம் பாய்பறவை எச்சம்
மிகமேல் உருதகற்றும் விண்ணின்—முகிலதனுல்
பெய்யுமழை யைத்தடுக்கும் பேரழகு மாம்ஒருவன்
கையில் குடையிருந்தக் கால். (3)

### மோரும் நீரும்

காரென்று போர்படைத்தாய் ககனத் துறும்போது
நீரென்று பேர்படைத்தாய் நீள்நிலத்தில் வந்ததற்பின்
வாரொன்று பூங்குழலாள் ஆய்ச்சிகையில் வந்ததற்பின்
மோரென்று பேர்படைத்தாய் முப்பேரும் பெற்ருயே. (4)

## காந்தி! வாழ்க!

வாழ்கநீ எம்மான் இந்த
வையத்து நாட்டில் எல்லாம்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி
விடுதலை தவறிக் கெட்டுப்
பாழ்பட்டு நின்ற தாமோர்
பாரத தேசந் தன்னை
வாழ்விக்க வந்த காந்தி
மகாத்ம! நீ நீடு வாழ்க! (5)

### குறிப்பு

**தனிப்பாடல்கள் :** பல புலவர் பல சமயங்களில் பல வகைப்பட்ட செய்திகளைப் பற்றிப் பாடிய பாடல்கள் தனிப்பாடல்களாம்.

### அருஞ்சொல் விளக்கம்

1. ஏர் - கலப்பை; வித்து - விதை; அண்மை - சமீபம்; செய்வார் - வேலையாட்கள்.

2. அனைத்தும் - எல்லாவற்றையும்; சீர்தூக்கி - ஒப்பிட்டு; வையம் - பூமி; தெள்ளு - தெளிவான; தமிழ் வேதம் - திருக்குறள்; செப்பி - கூறி, இயற்றி.

3. பகலோன் - சூரியன்; தெறு - சுடுகின்ற; பாய் பறவை - ஆகாயத்தில் தாவும் பறவை; மிகு - மிகுதியாக; மேல் உருது - மேலே படாமல்.

4. கார் - மேகம்; ககனம் - ஆகாயம்; உறும்போது - பொருந்தியுள்ள போது; நீள் - நீண்ட; வாரொன்று - நீளமான; பூங்குழல் - மலர்களையுடைய கூந்தல்.

5. வையம் உலகம்; காந்தி - மோகனதாஸ் கரம்சந்த் காந்தி; நீடு - நீண்ட காலம்; இச் செய்யுளை இயற்றியவர் தேசீய கவி சுப்பிரமணிய பாரதியார்.

## வினுக்கள்

1. உழவுத் தொழில் எவற்ருல் சிறப்படையும் ?

2. நெசவுத் தொழில் எக்காரணம் பற்றிச் சிறப்புடைய தாகும் ?

3. குடையின் பயன்கள் யாவை ?

4. மோருக்கு மற்றும் இரண்டு பெயர்களாகக் குறிக்கப் படுவன எவை ? அவை எங்ஙனம் பொருந்தும் ?

5. நம் பாரத தேசத்தின் நிலையைப் பாரதியார் எங்ஙனம் விளக்குகிருர் ?

6. காந்தியடிகள் நம் நாட்டுச்குச் செய்த அரிய தொண்டு யாது ?

## பயிற்சி

1. பிரித்து எழுதுக :—இரண்டுளதாய், சொற் கேட்டால், உருதகற்றும், முகிலதனுல், பெய்யுமழை, பூங்குழலாள், வந்ததற் பின், தாழ்வுற்று, பேரழகு.

2. எதிர்ப்பதம் கூறுக :—அண்மை, இனிது, வாழ்விக்க, விடுதலே.

3. கைத்தொழில்களேக் கற்பதால் நேரும் நன்மைகள் என்பது பற்றி இருபது வரிகளில் கட்டுரை எழுதுக.



# MOOVAR TAMIL VACHAKAM

**BOOK II FOR FORM II**

SPECIAL COURSE

By

**Vidwan G. VILVAPATHY**
**Vidwan M. S. VENKATACHARI**
**&**
**T. R. SRINIVASAN, B.A., B.T.**



***Price As. 12/-***